### III.—ELECTION OF DEPUTY SPEAKER.

**MR. SPEAKER:** சபையின் அடுத்த அலுவல், 'உதவி சபா நாயகர் தேர்தல்' ஆகும். உதவி சபாநாயகர் பதவிக்கான அபேட்சகர் விண்ணப்பங்கள் ஏற்கனவே தாக்கல் செய்யப்பட்டு விட்டன. சட்டசபை விதிகளின் 13 (4) விதியின்படி, உதவி சபா நாயகர் பதவிக்குப் பிரேரேபிக்கப்பட்டுள்ள உறுப்பினர்களின் பெயர்களையும், அவர்களைப் பிரேரேபித்தவர்கள், ஆமோதித்தவர் கள் ஆகியவர்களின் பெயர்களையும் நான் முதலில் இந்த அவைக்கு அறிவித்தாக வேண்டும். அவை பின்வருமாறு :

| வரிசை எண். | பிரேரேபிக்கப்பட்டவர். | பிரேரேபித்தவர். | ஆமோதித்தவர். |
|---|---|---|---|
| 1. | திரு. கே. பார்த்த சாரதி. | திரு. எம். பக்தவத்சலம். | திரு. பி. கக்கன். |
| 2. | திரு. கே. பார்த்த சாரதி. | திரு. கே. டி. கோசல ராம். | திரு. எம். எஸ். செல்வராஜன். |
| 3. | திரு. கே. பார்த்த சாரதி. | திரு. கே. எஸ். அப்துல் அஜீஸ். | திரு. எஸ். சிவ சுப்பிரமணியன். |

ஒரே ஒரு உறுப்பினர் மட்டும் நியமனம் செய்யப்பட்டிருப் பதால், நான் திரு. கே. பார்த்தசாரதி அவர்கள் இந்தச் சபையின் உதவி சபாநாயகராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார் என்று அறிவிக்கின்றேன். (ஆரவாரம்.)

திரு. கே. பார்த்தசாரதி அவர்கள் என்னுடன் 1953-ஆம் ஆண்டு முதல் 1957-ஆம் ஆண்டு வரை இந்தச் சபையில் அங்கத்தினராக இருந்து பணி புரிந்தவர்; சட்டம் பயின்று, வழக்கறிஞராகவும் தொழில் புரிந்தவர். அவர்களும், உங்களுடைய ஒத்துழைப் புடன், நல்ல முறையில் அவருடைய கடமையைச் செய்வார்கள். உதவி சபாநாயகராகத் தேர்தெடுக்கப்பட்டுள்ள அவரை நான் பாராட்டுகின்றேன்.

### IV.—FELICITATIONS TO SPEAKER AND DEPUTY SPEAKER.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM:** கனம் சபாநாயகர் அவர்களே, இன்று மகத்தான ஒரு பொறுப்பை இந்த மன்றம் தங்களுக்கு அளித்திருக்கிறது. தாங்கள் இந்த மன்றத்தின் சபாநாயகராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறீர்கள். அதுவும், தாங்கள் போட்டியின்றி ஏகமனதாகவே இந்த மன்றத்தின் சபாநாயகராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றீர்கள் என்பது எங்கள் எல்லோருக்கும் மிகுந்த மகிழ்ச்சியைத் தருகின்றது. அதற்காக நான் தங்களைப் பாராட்டுவதற்கு முன், எதிர்க் கட்சி யினரைப் பாராட்ட வேண்டும். ஜனநாயக முறையில் நடை பெறுகின்ற தேர்தலில் போட்டி கூடாது என்று யாரும் வற்புறுத்துவது முறை அல்ல. அவ்வாறே, ஜனநாயக முறையில் நடைபெறுகின்ற தேர்தல்களில் சிறுபான்மையோர் வேண்டு வதையே பெரும்பான்மையினர் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்துவதோ, எதிர்பார்ப்பதோ அதுவும் ஜனநாயகத்திற்கு உகந்தது அல்ல என்று நான் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ள

விரும்புகிறேன். எனினும், தாங்கள் ஏகமனதாகத் தேர்ந் தெடுக்கப்படுவதற்கு எதிர்க் கட்சியினரும் ஒத்துழைத்து உதவிய தற்கு என்னுடைய நன்றியை அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தாங்கள் இந்த மன்றத்திற்குப் புதியவர் அல்ல. கனம் தற்காலிக சபாநாயகராக இருந்தவர் நினைவுபடுத்தியது போல், 1952-ஆம் ஆண்டு முதல் 1957-ஆம் ஆண்டு வரை ஐந்து ஆண்டுகள் இந்த மன்றத்திலே தாங்கள் உறுப்பினராக இருந்து, சிறந்த தொண்டு புரிந்திருக்கின்றீர். அந்த அனுபவம் தங்களுக்கு உண்டு. தாங்கள் நீண்ட காலமாகப் பொது வாழ்க்கையில் ஈடு பட்டு அருந் தொண்டு புரிந்திருக்கின்றீர்கள். அரசியல் நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றவர்களுக்கு அவைகளை விட்டு விடுவது சற்று கடினமான காரியம்தான். அரசியல்வாதிகள் அதை நன்றாக உணர்வார்கள். ஆனால், இப்பொழுது சபாநாயக ராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள தாங்கள், இன்று முதற்கொண்டு அரசியல் விவகாரங்களில் பங்கு கொள்ளமாட்டீர்கள். இது தாங்கள் செய்யக்கூடிய ஒரு பெரிய தியாகம் என்று நான் கருதுவேன். அதற்காகவும் நான் தங்களைப் பாராட்டுகிறேன். தாங்கள் இந்த மன்றத்தின் சபாநாயகராக இருந்து சிறந்த வகையில் தொண்டாற்றுவீர்கள் என்ற நம்பிக்கை எங்கள் எல்லோருக்கும் உண்டு. தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் இந்தச் சட்டசபையின் சபாநாயகராக இருந்தவர்கள் எல்லோரும் சிறந்ததொரு பரம்பரையை உண்டாக்கியிருக்கிறார்கள் என்று நாம் பெருமைப்படுகிறோம். அந்தப் பரம்பரையில் வந்துள்ள தாங்களும் மேலும் சிறப்பான மரபுகளை ஏற்படுத்துவீர்கள் என்று நான் நம்புகிறேன். தங்களுக்கு போதிய திறன் உண்டு— தன்மையும் உண்டு.

சபாநாயகராகத் தொண்டாற்றுவது ஒரு சங்கடமான வேலை தான். கடினமான பொறுப்புதான். ஆனால் தாங்கள் உறுதி யாகவும், சுமுகமான முறையிலும் இந்த மன்ற அலுவல்களை நல்ல முறையில் நடத்திச் செல்வீர்கள் என்றே நான் நம்புகிறேன். பார பட்சமின்றி எல்லா உறுப்பினர்களுக்கும் நடுநிலையில் இருந்து நீதி வழங்கக்கூடிய முறையில் நீங்கள் நடந்து கொள்வீர்கள் என்பதில் எங்களுக்கு ஐயமில்லை. எதிர்க்கட்சியினருடைய உரிமைகள் மிகுந்த கவனத்துடன் பாதுகாக்கப்படவேண்டுமென்பதை நான் தங்களுக்கு எடுத்துக்கூற வேண்டியதில்லை. ஆனால் சிறுபான்மை யோருக்கு உரிமைகள் இருப்பது போலவே பெரும்பான்மை யோருக்கும் உரிமைகள் உண்டு. சிறுபான்மையோருடைய உரிமைகளுக்கு எவ்வாறு பாதுகாப்பாக இருக்கவேண்டுமோ அப்படியே பெரும்பான்மையோரின் உரிமைகளும் பாதுகாக்கப் படவேண்டும். யாருடைய உரிமைக்கும் பங்கமில்லாமல் தாங்கள் நடந்து கொள்வீர்கள் என்பதில் எனக்கு ஐயமில்லை. அத் தகைய ஆற்றல் தங்களுக்கு உண்டு. அத்தகைய நம்பிக்கை இந்த மன்றத்தில் உள்ள அங்கத்தினர்கள் எல்லோருக்கும் உண்டு. இந்த மன்றத்தின் அங்கத்தினர்கள் எல்லோரிடத்திலும் எப்படி

31st March 1962] [Sri M. Bhaktavatsalam]

தாங்கள் நம்பிக்கையைப் பெற்று ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறீர்களோ அப்படியே சபாநாயகராகச் சிறந்த முறையில் தொண்டாற்றி இந்த மன்ற அங்கத்தினர்கள் எல்லோருடைய பாராட்டுதல்களையும் தாங்கள் பெறவேண்டும்—பெறுவீர்கள் என்றே நான் நம்புகிறேன்.

உதவி சபாநாயகர் அவர்களும் இந்த மன்றத்திற்குப் புதியவர் அல்ல. தாங்கள் சுட்டிக்காட்டியபடி அவர் 1953-ஆம் ஆண்டு முதல் 1957-ஆம் ஆண்டு வரையில் இந்த மன்றத்தின் உறுப்பினராக இருந்து தொண்டாற்றியிருக்கிறார். அவர்களும் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு எதிர்க்கட்சியினர் ஒத்துழைத்ததற்காக என்னுடைய பாராட்டுதலைத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்த மன்றத்தின் உதவி சபாநாயகராகப் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் திரு. பார்த்தசாரதி அவர்களுக்கும் என்னுடைய வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தாங்கள் இந்த ஸ்தானத்தில் அமர்வதற்கு முன்பு வரையில் சீரிய முறையில் இந்த மன்றத்தின் தற்காலிக சபாநாயகராகப் பணியாற்றிய திரு. கிருஷ்ணசாமி நாயுடு அவர்களுக்கும் நம்முடைய பாராட்டுதலைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

மீண்டும் தங்களுக்கு இந்த மன்றத்தின் நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொண்டு என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

* **Sri V. R. NEDUNCHEZHIYAN :** மதிப்பிற்குரிய அவைத் தலைவர் அவர்களே, இந்த மன்றத்தின் அவைத்தலைவராகத் தாங்களும், துணை அவைத்தலைவராக மதிப்பிற்குரிய நண்பர் திரு. பார்த்தசாரதி அவர்களும் மன்றத்தின் உறுப்பினர்கள் அனைவராலும் ஒரு மனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிற பாங்கு கண்டு உள்ளபடி நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன். இந்த மன்றத்தின் அவைத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிற தங்களுக்கும், துணை அவைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிற திரு. பார்த்தசாரதி அவர்களுக்கும் என் சார்பாகவும், நான் சார்ந்திருக்கிற திராவிட முன்னேற்றக் கழக சட்ட மன்றக் கட்சியின் சார்பாகவும் வாழ்த்துதல்களையும், பாராட்டுதல்களையும், போற்றுதல்களையும் நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த மன்றம் தங்களுடைய சீரிய தலைமையின்கீழ் சீர்பெறும்—சிறப்புப்பெறும், பொலிவு பெறும்—வலிவு பெறும், என்று நான் உறுதியாக நம்புகிறேன். அந்த அளவுக்குத் தகுதியும்—திறமையும், அறிவும்—ஆற்றலும், அதற்கேற்ற உணர்வும்—உழைப்பும் தங்களிடத்தில் நிரம்பப் புதைந்து கிடக்கின்றன என்பதை நான் கேள்விப்பட்டிருக்கிறேன். சிறந்த வழக்கறிஞராக இருந்து அரும் பணியாற்றி இருக்கிறீர்கள்; அதைப்போன்று துணை அவைத் தலைவர் அவர்களும் சிறந்த வழக்கறிஞராக இருந்து அரும் பணியாற்றி இருக்கிறார்கள். நீங்கள் இருவரும் இந்தச் சட்ட மன்றத்திலே இதற்கு முன்னாலும் அங்கம் பெற்றிருந்து, அரும்பணிகள்

[Sri V. R. Nedunchezhiyan] [31st March 1962

பல ஆற்றியிருக்கிறீர்கள் என்பதை நான் கேள்விப்பட்டு பெரு மகிழ்ச்சி அடைந்தேன். இந்த மன்றத்தின் அவைத் தலைவ ராகவும், துணை அவைத் தலைவராகவும் நீங்கள் இருவரும் ஒரு மனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது பூரிப்பும் பெருமையும் கொள்ளவேண்டிய ஒன்றாகும்.

இந்த மன்றம் பன்னெடுங்காலமாகவே பேரோடும் புகழோடும் நிலை பெற்று வந்திருக்கிறது என்பதை வரலாறு நமக்கு நல்ல முறையில் எடுத்துக் காட்டுகிறது. இந்த மன்றத்தின் அவைத் தலைவராக, இருக்கையில் அமர்ந்திருந்தவர்கள் பலரும் சீர் பெற்றும், சிறப்புப் பெற்றும், இந்த மன்றம் ஓங்குபுகழ் எய்துகிற அளவுக்கு அரும்பணி பல ஆற்றி வந்திருக்கிறார்கள் என்பதை நாம் அறிகிறோம். அவர்களுடைய வழியிலே வந்துள்ளவர் களாகிய தாங்களும் அந்த அளவுக்குச் சிறக்க இந்த மன்றத்தை நடத்திச் செல்வீர்கள் என்ற உறுதிப்பாடு எங்களுக்கு உண்டு. அதற்கான தகுதியும், உள்ள உறுதியும்—ஊழும் தங்களிடம் அமைந்திருக்கின்றன. இப்படிப்பட்ட மன்றத்தில் தாங்கள், அதுவும் வழக்கறிஞராக இருந்து நல்ல அனுபவம் பெற்ற வராகவும், இந்தச் சட்ட மன்றத்தில் முன்பே அங்கம் பெற்று பணியாற்றியுள்ளவராகவும் இருக்கும் காரணத்தினால் சட்டங் களுடைய நுணுக்கங்களையும், சட்டங்களை இம்மன்றத்தில் நிறை வேற்றுகின்ற தன்மையினையும், அதற்காக வாதிடுகின்ற பான்மை யினையும், அதை நிலைநாட்டுவதற்கு எடுத்துக் கொள்கிற முயற்சி யினையும் நீங்கள் நன்றாக அறிந்தவராகவும் இருக்கிறீர்கள். எனவே தங்களது சீரிய தலைமையின்கீழ் இந்த மன்றம் மிக நல்ல முறையில் வளர்ந்து ஓங்குபுகழ் எய்தும் என்ற உறுதிப்பாடு எங்களுக்கெல்லாம் ஏற்படுகிறது. இந்த மன்றம் அதுவும் ஒருமன தாகத் தங்களைத் தேர்ந்தெடுத்திருப்பதன் மூலம் நல்லதொரு மரபை மற்றவர்களுக்கும் எடுத்துக்காட்டாக விளக்கும் வகை யில் உருவாக்கியிருக்கிறது. கட்சி அரசியலுக்கு அப்பாற்பட்ட ஒரு பதவியாகக் கருதப்படுகிற ஒன்று அவைத் தலைவர் பதவி யாகும். அதிலே வீற்றிருப்பவர்கள் எந்தக் கட்சியைச் சார்ந்த வராக இருந்தாலும் மன்றத்தில் உள்ள எல்லாக் கட்சிகளுக்கும், எல்லா உறுப்பினர்களுக்கும் பொதுவாக நடந்துக்கொள்ளக் கூடிய நடுநிலைமையாளராக இருக்கவேண்டியவர்களாவார்கள். இந்த மன்றத்தில் இருக்கிற அனைவருக்கும் நீதி வழங்குகின்ற முறையில், ஒரு நீதிபதி போலவும், அனைவருடைய உரிமையையும் பாதுகாக்கிற வகையில் ஒரு காவலர் போலவும், அனைவருக்கும் ஐயப்பாட்டை நீக்குகின்ற முறையில் ஓர் ஆசிரியர் போலவும், அனைவரிடத்திலும் அன்பு காட்டுகின்ற தன்மையில் ஒரு தாய் போலவும், அனைவருக்கும் ஜனநாயக சட்டமன்ற அறிவைப் புகட்டுவதில் ஒரு தந்தை போலவும், வழிதெரியாது திக்கற்றுத் திகைக்கின்ற நிலைமையில் உள்ளவர்களுக்கு வழிகாட்டுவதில் ஒரு வழிகாட்டி போலவும் விளங்குகின்ற தன்மையில் வீற்றிருக்க வேண்டியவர்களாவீர்கள். இப்படிப்பட்டப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளக்கூடியவர்கள் ஒருமனதாக உறுப்பினர்கள் அனைவ ருடைய அன்பையும், ஆதரவையும், ஒத்துழைப்பையும் பெறுவது என்பது மிகமிக நல்லதொரு மரபைக் காட்டுகின்ற ஒன்றாகும்.

31st March 1962] [Sri V. R. Nedunchezhiyan]

அந்த மரபு ஏற்படவேண்டுமென்று கருதித்தான் அவைத் தலைவர், துணை அவைத் தலைவர் தேர்தலில் போட்டிகூடாது என்று எண்ணி எதிர்க்கட்சியில் உள்ள நாங்கள் அதைத் தவிர்த்துக் கொண்டோம். கூடியவரையில் இந்த மன்றத்தில் அவைத் தலைவர், துணை அவைத் தலைவர் போட்டியின்றியே தேர்ந் தெடுக்கப்படுவதற்கு ஆளும் கட்சியினர் எதிர்க்கட்சியினரையும் கலந்து, அவர்களுக்கும் ஓரளவு மதிப்பு அளித்து ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்படுகிற ஒரு முறையை, அதற்கான சூழ்நிலையை ஏற்படுத்துவோமானால் இந்த மரபு நிலைக்கும்; நிலைத்து நீடித்து நெடுநாளைக்கு நிலவும் என்பதோடு மட்டுமின்றி பிற பல மாநிலங் களுக்கும் எடுத்துக்காட்டாகவும் அமையும் என்பதைப் பணிவன் புடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆகவே தான், ஒருமனதாக இந்த மன்றத்தின் அவைத் தலைவர் அவர்களும், துணை அவைத் தலைவர் அவர்களும் தேர்ந்தெடுக்கப் படவேண்டுமென்று நாங்கள் விரும்பினோம். அதற்குக் காரணம் ஆளும் கட்சியைச் சேர்ந்த அவையின் முதல்வர் எடுத்துக் காட்டியதுபோல் இப்பதவியில் இருப்பவர்கள் கட்சி அரசிய லுக்கும் அப்பாற்பட்ட தன்மை பெற்றவர்களாவார்கள். இது வரையில் தங்களுக்கு ஒரு கட்சியின் தொடர்பும், அந்தக் கட்சியி னுடைய கருத்துக்களுக்கு ஆதரவு தேடும் தன்மையில் பணி யாற்றுகின்ற ஆவலும் உள்ளவர்களாக இருந்து வந்திருந்தாலும், இந்தப் பொறுப்பை ஏற்றதற்குப் பிறகு இந்தப் பொறுப்பில் இருந்து, கட்சிபாகுபாடின்றி நடுநிலையில் இருந்து பணியாற்ற வேண்டிய கடமையுள்ளவர்களாக இருக்கிறார்கள்.

சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்து ஒரு பால்
கோடாமை சான்றோர்க்கு அணி.

என்று வள்ளுவப் பெருந்தகை எடுத்துக்கூறியதற்கிணங்க இரு பகுதியையும் சரிசமமாக வைத்து ஒரு பக்கமும் அசையாமல் சரிவர நிறுத்தி நீதி வழங்கவேண்டிய கடப்பாடு உடையவர் களாக இருக்கிறீர்கள். பொதுவாக இந்த மன்றத்திலுள்ள எல்லா உறுப்பினர்களுக்கும் பொதுவான ஒருவராக விளங்கவேண்டிய தன்மை உடையவராக இருக்கிறீர்கள். நாங்களும் இந்த மன்றத் தில் உள்ள உறுப்பினர்கள் அனைவரும் எங்களுக்கெல்லாம் பொது வான ஒருவராக விளங்குகிறவர் அவைத் தலைவர் என்ற கண் ணோட்டத்தில் காணவேண்டியவர்களாக இருக்கிறோம். அந்த அளவுக்கு இந்த மன்றத்தை மிக நல்லமுறையில் நடத்திச் செல் வதற்கு உறுதுணையான ஒத்துழைப்பையும், நல்ல ஆதரவையும் தங்களுக்கு நாங்கள் நல்குவதோடு கூட தங்கள்பால் முழு அன் பையும் காட்டுவோம் என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

நாங்கள் எதிர்க்கட்சி என்ற காரணத்திற்காக ஆளும் கட்சி கொண்டு வருகிற எல்லாவற்றையும் எதிர்ப்போம் என்று எண்ண வேண்டாம். ஆளும் கட்சி செய்கிற நல்லவைகளுக்கு எல்லாம் நாங்கள் ஆதரவாக இருப்போம், அவர்களுக்கு உறுதுணையாக நின்று ஒத்துழைப்பதற்கும் நாங்கள் ஆயத்தமாக இருக்கிறோம் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். நீதி குலைந்து, நேர்மை குறைந்து, குறைகள் மலியும்போது, குற்றங்கள் நிகழும்போது,

அவற்றைக் களையவும், சுட்டிக்காட்டவும், போக்கவும்—நீக்கவும் நல்ல சூழ்நிலைமையை ஏற்படுத்தவும் எதிர்க்கட்சியினர்கள் கடமைப்பட்டவர்கள்.

நாட்டின் நலம் கருதி, நாட்டின் அரசியலில் நல்லதொரு ஜன நாயகம் தழைக்கவும், பாராளுமன்ற ஆட்சிமுறை ஏற்றம் பெற வும், பொருளாதாரச் செழிப்பு ஏற்படவும், நாட்டில் உரிமைகள் பெருகவும், விடுதலை மணம் கமழவும், மக்களுடைய வறுமை நீங்க வும், வாட்டம் போக்கவும், மக்கள் நலம் பெருகவும், நலிவு நீங்க வும், இன்னல்கள் மாயவும், இடுக்கண்கள் போகவும், தொல்லைகள் துயரங்கள் அகலவும், நாடு ஏற்றம் பெறவும், எழில் பெறவும், புகழ் பெறவும், பெருமை பெறவும், நாட்டின் வளம் பெருகவும், நாட்டுபொது வருமானம் பெருகி இந்த நாட்டு மக்களின் வாழ்க்கைத்தரம் உயரவும், மக்கள் வயிறார உண்ண உணவு கிடைக்கவும், மனமார உடுக்க உடை கிடைக்கவும், தேவையார தங்க இடம் கிடைக்கவும், நாட்டு மக்களுடைய தேவைக்கேற்ப உற்பத்தி பெருகவும், தொழில்கள் வளரவும், வாணிகம் கூடவும், வேலைவாய்ப்பு பெருகவும், பொருளாதார நிலை உயரவும் வசதி யாக ஆளும் கட்சியினர் எடுத்துக்கொள்கின்ற ஒவ்வொரு முயற் சிக்கும் நாங்கள் உறுதுணையாக இருப்போம்—நல்லாதரவு நல்கு வோம் என்ற உறுதிப்பாட்டைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்த மன்றத்தின் கண்ணியத்தைக் காப்பாற்றவும், மதிப்பை நிலைநாட்டவும், பெருமையை ஓங்கச்செய்யவும், புகழை நிலை நாட்டச் செய்யவும் இந்த மன்றத்தின் அவைத் தலைவராகத் தேர்ந் தெடுக்கப்பட்டுள்ள தாங்கள் எடுக்கின்ற எல்லா முயற்சிகளுக்கும் எதிர்க்கட்சியைச் சார்ந்த நாங்கள் எங்களுடைய முழு ஆதரவை யும், ஒத்துழைப்பையும் அன்போடு அளிப்போம் என்றும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

தாங்களும், துணை அவைத்தலைவர் அவர்களும் நடுநிலைமை கொண்டு, நீதி கொண்டு, நேர்மை கொண்டு இந்த மன்றத்தின் மரபுகளை நிலை நாட்டி, இந்த மன்றத்தின் புகழ் ஓங்கும்படி பணிகளைப் புரிந்து, ‘வாழ்க வாழ்க’ என்று வாழ்த்தக் கடமைப் பட்டிருக்கிறேன்.

இந்த மன்றத்தின் பெருமையும், புகழும் மதிப்பும் ஓங்குகிற அளவுக்கு நீங்கள் எடுத்துக்கொள்கின்ற முயற்சிகள், ஆற்றுகின்ற தொண்டுகள் அனைத்தும் ‘வெல்க வெல்க’ என்று கூறி, அவைத் தலைவராகிய தங்களையும், துணை அவைத் தலைவராகிய எனது மதிப்பிற்குரிய நண்பர் திரு. பார்த்தசாரதி அவர்களையும் நான் மீண்டும் மீண்டும் பாராட்டுகிறேன், வாழ்த்துகிறேன், வரவேற் கிறேன். வணக்கம்.

*** SRI SAW. GANESAN :** கனம் சபாநாயகர் அவர்களே, இன்றையதினம் எவ்விதமான எதிர்ப்பும் இன்றி, பரிபூர்ணமான நிலையிலே, ஏகமனதோடு தேர்ந்தெடுக்கப்பெற்ற சபாநாயகராகிய உங்களையும், உதவி [redacted] சபாநாயகராகத் தேர்ந்தெடுக்கப்பெற்ற

திரு. கே. பார்த்தசாரதி அவர்களையும் சுதந்திரக் கட்சியின் சார்பாகவும் என் சொந்த முறையிலும் மனமார வரவேற்கின்றேன்—வாழ்த்துகின்றேன்—பாராட்டுகின்றேன்.

உங்களுடைய சட்ட அறிவும், உலக அனுபவமும், பொது ஜனப் பணியும், இந்தப் பதவியை நீங்கள் திறம்பட வகித்து, நேர்மையும் நிதானமும் தவறாமல், வரன்முறை பிறழாமல், அறம் திறம்பாது செவ்விய முறையில் நீங்கள் நிகழ்த்தவும், எல்லாவற்றையும் நடத்திக் கொடுக்கவும் பூரண தகுதி உடையவர்கள் என்பதை நாங்கள் மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்ளுகிறோம். அந்த நல்ல ஆறுதல் நிறைந்த மனத்தோடு உங்களை ஏகமனதாகத் தேர்ந்தெடுத்த எல்லா உறுப்பினர்களையும் நான் பராட்டுகிறேன்.

வருகிற காலத்திலே, பாரம்பரியமாக வளர்ந்து வந்திருக்கிற இந்த சென்னைச் சட்ட மன்றத்தின் சிறப்பான மரபுகளையெல்லாம் காத்து, இதனுடைய புகழினை மேலும் மேலும் வளர்கின்ற முறையிலே நீங்கள் உயர்ந்த, பண்பட்ட, சிறந்த, மேலான, புனிதமான முறைகளையெல்லாம் வகுத்துத் தர இருக்கிற உங்களுடைய கட்டளைக்கு நாங்கள் கட்டுப்பட்டு பரிபூரணமான ஆதரவும், ஒத்துழைப்பும் தருவோம்; இந்தச் சபையின் தரம் குறையாமல் இருப்பதற்கு நீங்கள் எடுக்கிற எல்லா முயற்சிகளிலும் நாங்கள் ஒத்துழைப்போம். உங்களுடைய கட்டளைகளையெல்லாம் மனப்பூர்வமாக ஏற்போம். அதேபோல், நீங்கள் ஆளை, அல்லது எண்ணிக்கையை, அல்லது கட்சியை எல்லாம் கவனிக்காமல், விஷயத்தின் தரத்தை உணர்ந்து, அதற்குத் தக்க நீதி வழங்கக்கூடிய நேர்மையையும் திராணியையும் உடையவர்களாக இருக்கின்றீர்கள் என்பது எங்களுக்கு இதயம் நிறைந்த ஆறுதலைத் தருகிறது என்பதை உங்களுக்குப் புலப்படுத்திக்கொண்டு மீண்டும் எங்களுடைய வாழ்த்துக்களையும், வணக்கத்தையும், பாராட்டுதலையும், அதற்குமேலாக எங்களுடைய ஒத்துழைப்பையும் உங்களுக்குச் சமர்ப்பிக்கின்றோம். அப்படியே உதவி சபாநாயகர் அவர்களுக்கும் எங்களுடைய அன்பார்ந்த வாழ்த்துடன் ஒத்துழைப்பையும் பாராட்டுதலையும் தெரிவிக்கின்றோம். வணக்கம்.

SRI M. KALYANASUNDARAM : கனம் சபாநாயகர் அவர்களே, இந்தச் சபை ஒரு அங்கத்தினருக்கு அளிக்கக்கூடிய மிகச்சிறந்த கௌரவம் சபாநாயகர் ஆசனத்தில் அமரவைப்பது. தங்களுக்கு இன்று அளிக்கப்பட்டிருக்கக்கூடிய கௌரவம் அதை விடச் சிறந்தது. ஏனெனில் இந்தச் சபையில் எல்லாப் பகுதியினரும் ஏகோபித்து ஒருமனதாக போட்டியின்றி தங்கள் இருவரையும் அமரவைத்திருக்கின்றார்கள்—தலைவராகவும், துணைத் தலைவராகவும். இது மிகச்சிறப்பான கௌரவம். அத்தகைய கௌரவத்தை அடைந்த தங்கள் இருவரையும் என்னுடைய சார்பிலும் என்னுடைய கட்சியின் சார்பிலும் நான் மனப்பூர்வமாகப் பாராட்டுகிறேன்.

[Sri M. Kalyanasundaram] [31st March 1962

தாங்கள் இருவரும் சட்டசபைக்குப் புதிதல்ல என்பதை ஏற்கெனவே தாங்கள் எடுத்துக்காட்டிவிட்டீர்கள். 1952-ல் இருந்து 1957 வரை தாங்கள் முதல் சட்டசபையில் அங்கத்தினராக இருந்ததையும் 1953-ல் உப-தேர்தலில் வெற்றி பெற்று 1957 வரைக்கும் திரு. பார்த்தசாரதி அவர்கள் அங்கத்தினராக இருந்ததையும் நான் நன்றாக நினைவு வைத்துக்கொண்டிருக்கிறேன். மிகவும் அமைதி, பொறுமை இத்தகைய பண்புகளை நான் கண்டிருக்கின்றேன். ஆளும் கட்சியிலே இருந்த காரணத்தினால் அப்பொழுது அங்கத்தினராக இருந்தும் அதிக சந்தர்ப்பம் இல்லாமல் இருந்திருக்கலாம். சபையில் செய்ய வேண்டிய கடமைகளை செய்ய வேண்டியதற்கு. ஆனால் இப்பொழுது நிறைய சந்தர்ப்பங்கள் தங்கள் இருவருக்கும் ஏற்படும். சபை அனுபவம் இருக்கிறது. இருவருக்கும் சட்ட ஞானமும் இருக்கிறது. சட்டத்தை எப்படி அர்த்தப்படுத்தலாம் அல்லது எப்படி அர்த்தப்படுத்தவேண்டும். என்கிற அனுபவமும் கோர்ட்டிலே வழக்காடிய அனுபவமும் இருக்கிறது. குற்றவாளிகள் அல்ல என்று வாதாடவும், குற்றம் புரியாதவரை குற்றம் புரிந்தார் என்று வாதாடவும் இருக்கக்கூடிய அனுபவமும் உண்டு. (குறுக்கீடு) ஆனால் வக்கீலாக இருக்கிறவர்கள் மத்தியிலேதான் நாம் நீதிபதிகளையும் எடுக்கின்றோம். நீதிபதிகளான பிறகு அவர்கள் இருசாராரினுடைய வாதங்களையும் கேட்டு, நடுநிலைமையாக இருப்பார்கள் என்று நம்பித்தான் வக்கீல்களாக இருப்பவர்களிலிருந்து நாம் நீதிபதிகளை எடுக்கின்றோம். அதேபோல் இந்தச் சபையிலும் அப்பேர்ப்பட்ட ஞானம் நிரம்ப இருப்பவர்களைப் பெற்றிருப்பது இந்தச் சபைக்கு நன்மை என்றுதான் நான் கருதுகிறேன். சபாநாயகர் பொறுப்பு கொஞ்சம் கடினமானது. இதற்கு 600 வருஷ சரித்திரம் உண்டு. 600 வருஷங்களுக்கு முன்னால் இருந்த கடினம் இல்லாவிட்டாலும் இப்பொழுதும் ஆளும் கட்சி எதிர்க்கட்சிகள் என்று பல கட்சிகள் இருக்கக்கூடிய சபையில் நடுநிலைமையாக இருப்பது என்பதும், ஆளும் கட்சியினர் மெஜாரிடியாக இருக்கக்கூடிய சபையில் அவர்கள் தங்கள் அரசியல் நடவடிக்கையை எப்படியாவது நிறைவேற்றவேண்டுமென்ற முயற்சியும், எதிர்க்கட்சி உணர்ச்சி வசப்பட்டு அதை எதிர்க்கக்கூடிய சந்தர்ப்பங்களும் பல ஏற்படும். ஆகையால் சங்கடமான பொறுப்பு இருக்கிறது. கடினமான வேலைதான். அந்தக் கஷ்டத்தை யாரும் குறைத்து மதிப்பிட முடியாது.

'சபாநாயகர்' என்று தமிழிலே நன்றாக அழைக்கிறோம். அது சபைக்கு நாயகமாக இருக்கக்கூடியவர் என்ற நல்ல அர்த்தத்தைத் தருகிறது. 'ஸ்பீக்கர்' என்றுதான் நம்முடைய அரசியல் சட்டத்திலே இருக்கிறது. ஸ்பீக்கர் என்ற ஆங்கில பதத்திற்கு பேசுபவர் என்று அர்த்தம். விரிவுரையாளர் என்றும் பொருள் படும். ஆனால் சபாநாயகராக தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு மிகக் குறைவாகப் பேசுபவருக்கு ஏன் 'ஸ்பீக்கர்' என்று பெயர் கொடுத்திருக்கிறார்கள் என்ற சந்தேகம் எனக்கு இருந்தது. அந்தச் சந்தேகத்தை போக்கிக்கொள்வதற்கு நான் ஆராய்ச்சி செய்தேன்.

31st March 1962] [Sri M. Kalyanasundaram]

பேசுவதற்கு சந்தர்ப்பம் குறைவாக இருப்பவருக்கு எப்படி ஸ்பீக்கர் என்ற பெயர் வந்தது என்று தெரிந்துக்கொள்ள பிரிட்டிஷ் பார்லிமெண்டு சரித்திரத்தை நாம் கொஞ்சம் படிக்க வேண்டும். அங்கே சட்டசபை சம்பிரதாயம் எப்படி உருவாகியது? சபாநாயகராக வருகிற சமயத்தில் அவர், பிரதிநிதிகள் சார்பிலே முடிமன்னனிடத்திலோ, அரசனிடத்திலோ, மக்களுடைய உரிமையை பாதுகாக்கக்கூடிய முறையில், பேசக்கூடியவர் என்று கருதப்படுகிறார். 'ஸ்பீக்கர்' என்ற பெயர் சபையிலே பேசுவதனால் வருவதல்ல. சபையின் சார்பில் அரசனிடத்தில் பேசுவதற்காக ஸ்பீக்கர் என்ற பெயர் கொடுக்கப்பட்டது. நாம் ஆங்கிலப் பாரம்பரியத்தை பின்பற்றக்கூடிய காரணத்தால், நமது அரசியல் சட்டத்திலும் அதே வார்த்தையை ஏற்றுக் கொண்டிருப்பதால் குறையில்லை. ஆனால் சபாநாயகர் அவர்களுடைய கடமைகள் நமது நாட்டிற்குத் தகுந்தபடி வேறுபட்டிருக்கின்றன என்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். பல சிக்கல்களில்கூட சில சபாநாயகர்கள் எவ்வளவோ தைரியத்தோடும், உறுதியோடும் மன்னனது ஆக்கிரமிப்புகளை எதிர்த்து சட்டசபையின் உரிமைகளைப் பாதுகாத்திருக்கிறார்கள். பார்லிமெண்டரி சம்பிரதாயம் தெரிந்திருப்பவர்களுக்கு தெரிந்திருக்கலாம், ஒரு முக்கிய சம்பவம். அப்படித் தெரியாவிட்டால் அதை தெரிந்து மனதில் வைக்கவேண்டியது ஒன்றாகும் அது. முதல் சார்ல்ஸ் மன்னனின் ஆட்சியின்கீழ் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் நிகழ்ந்த சம்பவமும், சபாநாயகர் அச்சபையின் உரிமையைப் பாதுகாக்க எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளையும் நாம் மனதில் வைத்துக் கொண்டிருக்க வேண்டும், சபையின் அங்கத்தினர்களும் சபாநாயகர் அவர்களும். மன்னன் சபையினுள் நுழைந்து நான் விரும்பாத ஐந்து பேர்களை கைது செய்து அனுப்புங்கள் என்று சபாநாயகரிடம் உத்தரவிடுகிறான். அக்காலத்தில் சபாநாயகர் மன்னனைக் கண்டால் அடிபணிந்து முழங்கால் மண்டியிட்டு மரியாதை செலுத்தும் காலம், அது. அப்பொழுது சபாநாயகராகயிருந்தவர் மன்னனைப் பார்த்து, "மன்னா, உன் உத்தரவுப்படி நடக்க நான் சக்தியற்றவனாகயிருக்கிறேன். 'I have neither eyes to see, nor tongue to speak in this place, as the House is pleased to direct me.' 'இந்தச் சபை எப்படி உத்தரவிடுகிறதோ அதன்படிதான் நான் பார்க்கக் கடமைப்பட்டவன், அதன்படித்தான் நான் பேச கடமைப்பட்டவன், உன் உத்திரவிற்கு அடிபணிந்து அந்த அங்கத்தினர்களை என்னால் காட்டிக் கொடுக்க முடியாது' என்று உறுதியாக சொன்னான். அதன் பின்னால் நடந்த நிகழ்ச்சிகள் சரித்திரத்தில் இருக்கிறது, அந்த மன்னன் போனான், ஆனால் சரித்திரம் போகவில்லை, சபையும், சபாநாயகர் பதவியும் போகவில்லை. அந்த மன்னனின் தலை முண்டமாக்கப்பட்டு வெஸ்ட்மின்ஸ்டர் ஆபியில் பார்க்க முடியும். மன்னன் ஆட்சி ஒழிந்து மக்கள் ஆட்சி உருவான சரித்திரத்தில் சபாநாயகர் அவர்களின் அந்தஸ்து தான் முக்கியமானது என்பதை இங்கு எடுத்துக் கூற விரும்புகிறேன். பின்னர், படிப்படியாக வளர்ந்து, வளர்ந்து மக்களாட்சி

[Sri M. Kalyanasundaram] [31st March 1962

மலர்ந்தது. ஆனல் நம் நாட்டிற்கு விசேஷமான பரம்பரை உண்டு. சுதந்திரம் அடைவதற்கு முன்பும், சுதந்திரம் அடைந்த பின்பும் நம் நாட்டு சரித்திரத்தில் நமது பண்பிற்கேற்ப விசேஷ பரம்பரையை பல பெரியோர்கள் சிருஷ்டித்து வைத்திருக்கிருர்கள், பல சீர்திருத்தங்கள் நடைபெற்றிருக்கின்றன. 1919-க்குப் பிறகு ஏற்பட்ட சீர்திருத்தங்களின் விளைவாக சிறிய அளவு நமக்கு உரிமைகள் அளிக்கப்பட்டது. மத்திய சட்ட சபைக்கு தேர்ந்தெடுக்கப்பட்ட சபாநாயகராகிய திரு. விட்டல் பாய் பட்டேல் அவர்கள் தலைமை தாங்கி, திறமையாக நடந்து நமக்கு கௌரவத்தையும், பெருமையும் அளித்திருக்கிருர்கள், பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்து ராணுவ ஆட்சி நடக்கிறபோது கூட, ராணுவ அதிகாரியை "சபையை விட்டு வெளியே போ" என்று சொல்லக்கூடிய அளவிற்கு ஆற்றல் படைத்தவர்கள், இந்தியர்கள் என்ற பெயரைத் தேடித் தந்தவர். சுதந்திரம் அடைந்த பின் நிலைமை மாறியிருக்கிறது என்பது வாஸ்தவமே. இந்த சபை யாருடைய தயவாலும் உருவாகவில்லை. மக்களின் மனப்பூர்வமான உறுதியால் தான் இந்த சபை உருவாகிறது என்பது அரசியல் சட்டம். நடைமுறையில் கோளாறுகள் இருக்கலாம். அது வேறு விஷயம். லோக் சபையிலும் சரி, மற்ற ராஜ்ய சட்டசபைகளிலும் சரி இங்குள்ள சபாநாயகர்களுக்கும், பிரிட்டிஷ் சபாநாயகருக்கும் இன்னும் அடிப்படையில் ஒரு வித்தியாசம் இருக்கிறது. பிரிட்டிஷ் சபாநாயகர் தேர்ந்தெடுத்த பிறகுகூட ராணியாரின் அங்கீகாரம் கிடைக்க வேண்டும். சபைக்கு உரிமையுண்டு என்று ராணியார் கூறியாக வேண்டும். அப்பொழுதுதான் சபாநாயகர் பதவியேற்றதாகும். ஆனல் நம் சபையில் அப்படியல்ல. இந்த நிமிடத்திலிருந்து தாங்கள்தான் சபாநாயகர். யாருடைய அனுமதியும் தங்களுக்கு தேவையில்லை. இதுதான் அடிப்படையான வித்தியாசம். தங்களை அகற்றும் அதிகாரம் யாருக்கும் கிடையாது. சபாநாயகரை அகற்றுவதற்குள்ள உரிமை சபைக்குத்தான் கொடுக்கப்பட்டிருக்கிறது. மெஜாரிட்டிக் கட்சியைச் சார்ந்தவர்கள் தங்கள் பெயரை பிரேரேபித்திருக்கலாம். எல்லோரையும் அணுகி ஏகோபித்துச் செய்வதை செய்ய அவர்கள் மீறியிருக்கலாம். ஆனல் எதிர்கட்சியைச் சேர்ந்தவர்கள் ஒன்று சேர்ந்து போட்டியைத் தவிர்த்தார்கள். ஆளும் கட்சியினர் எதிர்க்கட்சியினரை கலக்கத் தவறியது சரியல்ல என்பது என் அபிப்பிராயம். எப்படியிருப்பினும், ஒரு கட்சியைச் சேர்ந்தவர்கள் தங்கள் பெயரை பிரேரேபித்திருந்தாலும், அக்கட்சியைச் சேர்ந்து இந்த நிமிடம்வரை அக் கட்சிக்காக தியாகம் செய்தவர்கள், அக்கட்சிக்காக பல்லாண்டு வேலை செய்தவர்கள், அப்படிப் பட்டவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தும் அவர்கள் பார்த்து தங்களை நீக்க முடியாது. யாரும் தங்கள் சம்பளத்தில் காலணகூட குறைக்க முடியாது. மெஜாரிட்டி இருப்பதால் ஒன்றும் செய்து விட முடியாது. பிரிட்டனில், அரசியிடம் சொன்னல், அவர்களால் பதவியிலிருந்து அகற்ற முடியும். ஆனல் இங்கு அப்படியல்ல. சபையின் முன் கொண்டு வந்து, அதற்குண்டான காரணங்களைச் சொல்லி தமிழ்நாட்டிலுள்ள மூன்று கோடி

31st March 1962] [Sri M. Kalyanasundaram]

மக்களும் அறிய விளக்கம் சொல்லி ஏதாவது நடவடிக்கை சபாநாயகர் அவர்கள் மேல் எடுக்க வேண்டுமானால் எடுக்க வேண்டுமென்று சொல்லி சபாநாயகர் பதவிக்கு பெருத்த பாதுகாப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது, அரசியல் சட்டத்தில். சபாநாயகர் அவர்கள் ஆளும் கட்சிக்கும் எதிர்கட்சிக்கும் இடையே நடுநிலைமையாகயிருந்து தைரியமாகவும் சுயேச்சையாகவும் தனது மனசாட்சிக்கு சரி என்று படுவதைப் பார்த்து அந்த திசையில் நடக்கவேண்டுமென்று அத்தகைய அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இன்னும் அதிகப்படியான அதிகாரம் கொடுக்கவேண்டுமென்பதுதான் என் ஆசை. போகப் போக பேசிக் கொள்ளலாம். ஆளும் கட்சியைச் சார்ந்தவர்களையோ முதலமைச்சரையோ, நிதியமைச்சரையோ சபாநாயகர் எதிர்பார்க்கும் நிலை இருக்கக் கூடாது. பட்ஜெட் வரும்போது அதற்குண்டான யோசனைகளைக் கூறலாம் என்று நினைக்கிறேன். இதர சபைகளுக்கு போக விரும்பவில்லை, நம் சபையில் நடந்ததை கூறுகிறேன். முதலாவது, இரண்டாவது, இப்பொழுது மூன்றாவது சபை. சுதந்திரம் அடைவதற்கு முன்பும் பலர் திறமையாக, தைரியமாக நடந்திருக்கிறார்கள், எதேச்சாதிகாரத்தை எதிர்த்து. அது ஒரு புறமிருக்கட்டும். முதல் சபையில் நடந்த ஒரு சம்பவத்தை நினைவூட்ட விரும்புகிறேன். 53 ஜூலை என்று நினைக்கிறேன். ஸ்ரீ பார்த்தசாரதி அவர்கள்கூட இருந்ததாக ஞாபகம். திராவிட முன்னேற்றக் கழகம் செய்த ஒரு போராட்டம், நான்சென்ஸ் போராட்டமோ ஏதோ நடத்தியபோது டால்மியாபுரத்திலும், தூத்துக்குடியிலும் துப்பாக்கிப் பிரயோகம் நடந்தது. ஆறு பேர்கள் இறந்தனர். இப்பொழுது திராவிட முன்னேற்றக் கழகத்தினர் உட்கார்ந்திருக்கும் இடத்தில் நாங்கள் உட்கார்ந்திருந்தோம். எதிர்கட்சியினர், துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டிக்கும் வகையில் ஒரு ஒத்திவைப்பு பிரேரணையைக் கொடுத்தோம். திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சார்ந்தவர்கள், மற்றமுள்ளவர்கள் இறந்திருந்தார்கள். இன்றைய சுதந்திராக் கட்சியின் தலைவராகயிருக்கும் ராஜாஜி அவர்கள்தான் அன்று முதலமைச்சர் ஸ்தானத்தில் உட்கார்ந்திருந்தார்கள். நாங்கள் கொண்டு வந்த ஒத்திவைப்பு பிரேரணை சரியல்ல என்றும், அதை ஏற்கக் கூடாதென்றும் வாதாடினார்கள். விசாரணை ஏற்படுத்தி விட்டோம் விசாரணைக்கு அது குந்தகம் விளைவிக்கும் என்று வாதாடினார்கள். ஒத்திவைப்பு கூடாது. இந்த சபையில் விவாதிப்பதனால் விசாரணைக்கு குந்தகம் ஏற்படும் என்றெல்லாம், ராஜாஜி அவர்கள் அவர்களுக்குரிய திறமையை உபயோகித்து, அவரது அந்தஸ்து, அதிகாரம் எல்லாவற்றையும் பயன்படுத்திப் பேசினார்கள். அதிகாரம் பூராவும் சபாநாயகர் அவர்கள் கையில் இருக்கிறது. சபாநாயகர் அவர்கள் பார்த்து அது ஒழுங்காக இருக்கிறது என்று கருதினால்தான், அப்படித் தெரிவித்தால்தான் அதற்கு ஆதரவாக எவ்வளவு பேர்கள் இருக்கிறார்கள் என்று எழுந்து நிற்க முடியும். அப்பொழுது ஸ்ரீ சிவஷண்முகம் பிள்ளை அவர்கள் எழுந்து நின்று இப்பிரேரபணை ஒழுங்காகயிருக்கிறது என்று அறிவித்தார்கள். முதலமைச்சர் அவர்களின் வார்த்தை ஏற்றுக் கொள்ளப்படவில்லை, ஒழுங்காக

[Sri M. Kalyanasundaram] [31st March 1962

யிருக்கிறது என்று அறிவிக்கப்பட்டு 30 பேர்கள் நாங்கள் எழுந்து நின்றோம், பிரேரேபணை அனுமதிக்கப்பட்டது. பிறகும் கூட முதலமைச்சர் அவர்கள் அவர்களது சாகசத்தை உபயோகித்து ஐந்து நாட்கள் வரை விவாதத்தை நடக்கவொட்டாமல் தடுத்து, பின்னர் ஸ்ரீ சிவஷண்முகம் பிள்ளை அவர்கள் முயற்சி எடுத்து விவாதம் நடந்தது என்பது 1953 சட்டசபை நடவடிக்கைகளை புரட்டிப் பார்த்தால் தெரிய வரும்.

அவ்வளவு தெளிவோடு, நியாயமாகவும், நேர்மையாகவும், முதலமைச்சர் சொன்னாலும் சரி, நடுநிலையாக நின்று எது நேர்மை என்று படுகிறதோ அதை எடுத்துக்கூறினர் திரு. சிவஷண்முகம் பிள்ளை அவர்கள். அதே போன்று தான் சமீபகாலத்தில், டாக்டர் திரு. கிருஷ்ணராவ் அவர்கள் வெள்ளை உள்ளம் படைத்த மனிதராக திகழ்ந்தார். பெரிய மனிதராக இருந்தார். அவர்கள் தமிழ்நாடு என்று பெயரிடவேண்டும் என்றுள்ள தீர்மானம் வந்த போது, திடீரென்று விவாதத்தை முடிக்கவேண்டும் என்று அன்றைக்கு சபையின் முதல்வராக இருந்த கனம் நிதி அமைச்சர் அவர்கள் ஒரு பிரேரேபணை கொண்டு வந்தார். அன்றைய தினம் சபையில் சிறிதளவு சூடு ஏறியிருந்தும்கூட, நல்ல முறையில் அன்று சபையை நடத்திச் சென்றார் டாக்டர் கிருஷ்ணராவ் அவர்கள். அது மட்டுமல்ல, விவாதம்தொடர்ந்து நடத்தலாம். என்று சொன்னார். இவ்விதம் நடுநிலைமையாக நின்று சபையை நடத்திச் சென்ற பல சான்றுகள் இங்கே இருக்கின்றன. இவைகளை எல்லாம் இந்த சபையின் கழிந்த கால நடவடிக்கைகளைப் பார்த்தால் தெரிய வரும். அவ்வளவு நல்ல முறையில் இந்த சபை பலராலும் போற்றக்கூடிய வகையில் நடந்திருக்கிறது. மக்களுடைய உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டும். அதே நேரத்தில் யாருடைய உரிமைக்கும் எந்த விதமான தீங்கும் ஏற்படக்கூடாது என்பதில் அக்கறையோடு இந்தச் சபையை நடத்திச் செல்ல வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதற்கு, என்னைப் பொறுத்த வரையில், எங்களுடைய கட்சி சார்பாகவும், என் சார்பாகவும் மிகுந்த ஒத்துழைப்பு உண்டு என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்த சபையின் எண்ணிக்கையை பார்க்கும்போது ஆளும் கட்சி அங்கத்தினர்களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கலாம். எதிர்கட்சியிலிருப்பவர்கள், நாங்கள், ஒரே முகமாக இல்லாமல் நான்கு முகங்களாக இருக்கிறோம். ஆனால் சில காரியங்களில் முரண்பாடாகவும், சில காரியங்களில் உடன்பாடாகவும் நாங்கள் இருக்க வேண்டிய நிலை ஏற்படலாம். சில நேரத்தில் ஆளும் கட்சியோடு உடன்பாடு ஏற்படவும் வேண்டி வரும். இவ்விதமான ஒரு விசித்திரமான சூழ்நிலை ஏற்படும் நிலைமையை இந்தச் சபையில் காணலாம். அந்தச் சமயத்தில் எல்லாம் சபாநாயகர் அவர்கள் இரண்டு பக்கத்திற்கும் சமமாக இருக்கவேண்டும். அதற்கு வேண்டியது ஒரே புன்முறுவல் தான். ஒரே புன்முறுவலின் மூலம் இரண்டு பக்கத்தினரையும் அமைதியாகப் பார்த்துக்கொள்ள முடியும். இதற்கான தன்மைகள் எல்லாம் தங்களிடம் இருக்கின்றன என்பதையும் நான் அறிவேன். தங்களுக்கு இந்த சக்தி எல்லாம்

31st March 1962] [Sri M. Kalyanasundaram]

இல்லை என்பதற்காக நான் இதைச் சுட்டிக்காட்டவில்லை. அமைதியான முறையில், பெருமை தரத்தக்க முறையில் இந்தச் சபையை நடத்திச் செல்ல தங்களுக்கும் உதவி சபாநாயகராக தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் திரு. பார்த்தசாரதி அவர்களுக்கும் உண்டு என்பதை நான் உணர்ந்திருக்கிறேன். அதோடு இந்தச் சட்டசபை நிகழ்ச்சிகள், நடவடிக்கைகள், தமிழ்நாட்டுக்குரிய புகழோடு விளங்குவதற்கான முறையில் நாம் அனைவரும் ஒத்துழைக்கத் தயாராய் இருக்கிறோம் என்பதைத் தெரிவித்துக் கொள்வதோடு ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் தங்களையும், உதவி சபாநாயகர் அவர்களையும் பாராட்டி, எங்கள் கட்சி சார்பாக என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொண்டு முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

**Sri T. L. SASIVARNA THEVAR :** மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, தாங்களுக்கும், இந்த சபையின் துணைத் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டிருககும் திரு. பார்த்தசாரதி அவர்களுக்கும் நானும் என்னுடைய மனப்பூர்வமான வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன். அதோடு இந்தச் சபையை நேர்மையாகவும் கௌரவத்தோடும் நடத்திச் செல்வதற்கான ஒத்துழைப்பை அளிப்போம் என்று வாக்குறுதி கொடுக்கிறோம். கனம் கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்னது போன்று, தாங்கள், இது வரையிலும் கோர்ட்டுகளில் ஒரு சார்பில் மட்டும் வாதாட நல்ல திறமை பெற்றிருந்த போதிலும், இனிமேல் இந்த சபையில் ஒரு சார்பாக நின்று வாதாட முடியாத ஒரு சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது. ஆகவே இன்னும் ஐந்து வருட காலத்திற்கு இந்த சபையை சீரிய முறையில் தாங்கள் நடத்திச் செல்வீர்கள் என்ற நம்பிக்கை எங்களுக்கு இருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொண்டு, ஒருமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் தங்களையும் துணைத்தலைவர் அவர்களையும் பாராட்டி என் வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

**Sri K. R. NALLASIVAM :** மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, தாங்களும், துணைத் தலைவர் அவர்களும் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதற்கு, சோஷியலிஸ்ட் கட்சியின் சார்பாக என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன். முக்கியமாக இந்த சபையில் தமிழிலே பேசி நடவடிக்கைகளில் கலந்து கொள்ளும் என் போன்றவர்களுக்கு, தாங்கள் இந்த சபையின் தலைவராக வந்திருப்பது மிகவும் முக்கியமானதாகும். இத்தனை நாட்களாக இந்தச் சபையில் எந்த அளவுக்கு தமிழ் பயன் பட்டதோ அதை விட இன்னும் சிறப்பாக முழுக்க முழுக்க தமிழ் இந்த சபையில் திகழும் என்பது நமக்கு மகிழ்ச்சிகரமான செய்தியாகும். அதோடு இன்றைக்கு சட்டபூர்வமாக தமிழைப் பயன்படுத்தவேண்டும் என்றுள்ள நிலைமை வந்திருப்பது இன்னும் சிறப்பான சூழ்நிலையாகும். மேலும் நம்முடைய ராஜ்யத்தைப் பொறுத்த வரையில் ஜனநாயக முறையில் நல்ல பண்பை வளர்த்திருக்கக்கூடிய நாடாகும். அதே நிலையை, இன்னும் வளருவதற்கும், மேலும் ஜனநாயக மரபுகளும், பண்புகளும் வளர்வதற்குரிய வகையில் தாங்கள் வழிகாட்டியாக

[Sri K. R. Nallasivam] [31st March 1962

இருப்பீர்கள் என்பதில் எங்களுக்கு சந்தேகமில்லை. இப்போதுள்ள நிலையில் ஜனங்களுடைய புதிய உரிமைகளை எல்லாம் சபையில் வற்புறுத்த வேண்டிய நிலை ஏற்படலாம். அப்படிப்பட்ட உரிமைகளை இந்த சபையில் கனம் அங்கத்தினர்கள் வற்புறுத்தும்போது சபையின் பழைய சம்பிரதாயங்கள் எப்படியிருந்தாலும், புதிய உரிமைகளைப் பாதுகாப்பதற்கும், அதற்குரிய மதிப்பு கொடுப்பதற்கும், பரிபூரணமான சந்தர்ப்பத்தை தாங்கள் கொடுப்பீர்கள் என்ற நம்பிக்கை எங்களுக்கு இருக்கிறது என்று கூறி, ஒருமனமாக தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் தங்களையும் உதவி சபா நாயகர் அவர்களையும் எங்கள் கட்சி சார்பாகப் பாராட்டி என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

SRI K. T. KOSALRAM: மதிப்புமிக்க தலைவர் அவர்களே, தமிழகத்தின் சட்டசபையின் சபாநாயகராக தாங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறீர்கள், ஏகமனதாக இங்கு பல நண்பர்கள் வக்கீல் தொழில் பார்த்துக்கொண்டிருந்த நேரத்தில் தாங்கள் ஒரு பக்கத்தில் மட்டும் தான் வாதித்திருப்பீர்கள் என்று குறிப்பிட்டார்கள். ஆகவே இப்போது வந்து இந்த சபைத் தலைவர் பொறுப்பை ஏற்பது மிகவும் சங்கடமானது என்றும் குறிப்பிட்டார்கள். தாங்கள் வக்கீலாக மட்டும் இருக்கவில்லை. பிராசிக்கியூட்டராகவும் இருந்திருக்கிறீர்கள். டிஃபென்ஸ் லாயராகவும் இருந்திருக்கிறீர்கள். ஆகவே எல்லாக்கட்சி சார்பிலும் வாதாடக் கூடிய திறமை தங்களுக்கு இருக்கிறது. தாங்கள் இதற்கு முன்னாலும் திறம்பட செயலாற்றியிருக்கிறீர்கள். ஆகவே எந்த விதமான சிக்கலும் இந்த சபையில் தங்களுக்கு ஏற்படாது என்கிற நம்பிக்கை எனக்குண்டு. இப்போது மட்டுமல்ல, இதற்கு முன்னாலும் தாங்கள் சட்டமன்றத்தில் இருந்திருக்கிறீர்கள், அரசியல் கட்சியிலும் வேலை செய்திருக்கிறீர்கள். ஒரு சமயத்தில் நீதிபதியாக பதவி ஏற்கவும் தங்களுக்கு சந்தர்ப்பம் வந்தது என்பதை நாங்கள் அறிவோம். தாங்கள் அதை எங்கே ஏற்றுக் கொண்டு போய்விடுவீர்களோ என்று எங்கள் ஜில்லாவிலுள்ள நண்பர்கள் கவலைப்பட்டதுண்டு. தங்களை நீதிபதியாக்குவதற்கு பல நீதிபதிகள் முயற்சித்தார்கள் என்பதும் எங்களுக்குத் தெரியும். இப்போது அவற்றுக்கு எல்லாம் மேலான நீதிபதியாக தாங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறீர்கள் என்றால் அது மிகவும் பொருத்தமானது. அந்த நல்ல காரியத்தைத்தான் இந்தச் சபையிலுள்ள அங்கத்தினர்கள் செய்திருக்கிறார்கள். எல்லா வகையிலும் இந்த சபைக்கு ஒரு சரித்திரம் உண்டு என்பதை பல நண்பர்கள் சொன்னார்கள். இந்த சட்டசபையின் சரித்திரத்தில் பல பெரும் மேதைகள் எல்லாம் இடம் பெற்றிருக்கிறார்கள். அப்படிப்பட்ட சரித்திரம் இன்னும் நிலைத்து நிற்கும் என்பதில் எனக்கு சிறிதும் சந்தேகமில்லை. இந்த சபையின் கௌரவம் மேலும் நல்ல முறையில் சிறந்து விளங்கும் என்ற நம்பிக்கை எனக்குண்டு. ஆகவே எல்லா விதத்திலும் தங்களை இந்த சபைக்கு தலைவராகத் தேர்ந்தெடுத்திருப்பது மிகவும் பொருத்தமானதாகும். அந்த அளவில் ஒருமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் தங்களையும், உதவி சபாநாயகர் அவர்களையும் பாராட்டி என் வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

31st March 1962]

**SRI M. KARUNANITHI :** சட்ட மன்றத் தலைவர் அவர்களே, துணைத் தலைவர் அவர்களே, இன்றையதினம் ஒரு புனிதம் நிரம்பியதும், பொறுப்பு மிகுந்ததுமான ஒரு பதவியிலே அமர்ந்திருக்கும் தங்களை வாழ்த்தி வரவேற்று பாராட்டுகின்ற வாய்ப்பு பெற்றமைக்காக நாங்கள் பெருமகிழ்ச்சியடைகின்றோம். இந்த மாமன்றத்திலே இன்முகம் காட்டி, புன்னகை புரிந்து, எத்தகைய சிக்கல்களையும் தீர்க்க வழிகண்ட பெரியவர், மறைந்த திரு. கிருஷ்ணராவ் அவர்களுடைய நல்ல திறமை வாய்ந்த முறைகளைப் பின்பற்றித் தாங்கள் எங்களை நடத்திச் செல்வீர்கள் என்பதில் எங்களுக்கு எந்தவிதமான ஐயமும் ஏற்படவில்லை. தாங்கள் திருநெல்வேலி மாவட்டத்திலே, பத்தமடைப் பள்ளியிலே பயின்று, இந்தப் பதவியை ஏற்கும் வரையில் பத்தமடைப் பாய் கூட்டுறவு ஸ்தாபனத்தினுடைய தலைவராகத் தாங்கள் இருந்தீர்கள் என்பதை எண்ணுகின்ற நேரத்தில், அந்தப் பாயைப் போன்ற மிருதுவான தன்மையை உங்கள் இருதயம் பெற்றிருக்கும் என்று நம்புகின்றேன். மிருதுவான இருதயம், மென்மையான இருதயம் இந்த மாமன்றத்தில் எங்களுக்கு நல்ல தீர்ப்புகளை அளிக்கும் என்று நாங்கள் திடமாக நம்புகிறோம். தங்களுடைய பெயருக்கேற்ப, எதிர் கட்சியைச் சேர்ந்த எங்களைச் செல்லமாக நடத்துவீர்கள் என்று கருதுகிறோம். அப்படியானால் ஆளும் கட்சிக்காரர்கள் செல்லமாக நடத்தப்படவேண்டாமா என்று ஆளும் கட்சித் தலைவர் அவர்கள் விழிகளால் எங்களைப் பார்த்துக் கேட்கிறார். ஆளும் கட்சிக்கு அதிகமான செல்லம் கொடுத்தால் பிள்ளை கெட்டுவிடும். ஆகவே, அளிக்கும் செல்லத்தை இரு தரப்பாருக்கும் பகிர்ந்து அளிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதிகமாக கூட்டுறவு இயக்கங்களில் தாங்கள் பணியாற்றிப் பெற்றிருக்கிற பயிற்சி காரணமாக இந்த மாமன்றத்தில் நல்ல கூட்டுறவையும் இங்கு இருக்கிற உறுப்பினர்களிடத்தில் தங்களால் ஏற்படுத்த முடியும் என்று நான் கருதுகிறேன். எதிர்க்கட்சியிலே இருக்கிற நாங்கள் இந்தத் தடவை, முன்னை விட, அதிகமாக வந்திருந்தாலும், ஏறத்தாழ 70-க்குக் குறைந்தவர்கள்தான் எதிர் தரப்பில் அமர்ந்திருக்கிறோம். வள்ளுவர் கூறிய—

உருவுகண் டெள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்கச்சாணி யன்னார் உடைத்து

என்ற குறளுக்கேற்ப ஆளும் கட்சியினர் ஆட்சிச் சக்கரத்தின் அச்சாணியாக எதிர்க்கட்சியை எண்ணுவார்கள் என்று கருதுகிறேன். இது தேரைச் செலுத்துகிற சாரதிக்கு நன்றாகப் புரியும். அந்தக் காரணத்தினாலோ என்னவோ, துணைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் 'பார்த்தசாரதி' என்ற பெயரோடு வந்திருக்கிறார். எதிர்க் கட்சியாகிய எங்களை அச்சாணியாக ஆக்கிக் கொண்டு ஆட்சிச் சக்கரத்தை நல்ல முறையில் சுழற்றும் பணியில் ஈடுபட்டிருக்கும் சபாநாயகருக்கு உறுதுணையாக இருப்பீர்கள் என்று நம்புகிறேன். ஜனநாயகத்தில் ஒரு புது மரபை ஏற்படுத்த வேண்டும் என்று எண்ணிய எண்ணம் எப்படியோ அந்த வாய்ப்பு தவறி விட்டபோதிலும், ஆளும் கட்சியினர் எதிர்க் கட்சி தங்களுடைய நிழலாக இருக்கவேண்டும் என்று கருதாமல், எதிர்

[Sri M. Karunanithi] [31st March 1962

கட்சியை நிலைக்கண்ணாடியாகக் கருதி, ஆளும் கட்சியின் முகத்தில் இருக்கிற மருக்களையும் பருக்களையும் நிலைக்கண்ணாடியில் பார்த்து முகத்தைத் திருத்திக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொண்டு, ஆளும் கட்சியினரும் எதிர்க் கட்சியினரும் இந்த மாமன்றத்தில் நல்ல நட்புறவோடு நாட்டுக்கான நல்ல பல காரியங்களைச் செய்ய தாங்கள் வழிகாட்டுவீர்கள் என்று நம்பி, விரும்பி, வேண்டிக் கேட்டுக் கொண்டு, வாழ்த்தி என்னுடைய உரையை முடிக்கின்றேன்.

* SRI K. A. MATHIALAGAN : கனம் சபாநாயகர் அவர்களே, இன்றைய தினம் இந்த மாமன்றத்தின் சபாநாயகராக நீங்களும், துணைச் சபாநாயகராக கனம் பார்த்தசாரதி அவர்களும் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிற இந்த மகிழ்ச்சிகரமான நிகழ்ச்சியில் எங்கள் கட்சித் தலைவரும் எதிர்க் கட்சித் தலைவருமான கனம் நெடுஞ்செழியன் அவர்கள் வாழ்த்திய வாழ்த்தில் நானும் பங்குகொள்கிறேன். என்னுடைய இதயபூர்வமான வாழ்த்துக்களைத் தங்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்த மாமன்றத்தில் இருக்கின்ற உறுப்பினர்கள் அடையக் கூடிய ஒரு பெரும் சிறப்பாகிய இந்தப் பெரும் பதவியினை அறிவும் ஆற்றலும் மிக்க நீங்கள் இன்றைக்குப் பெற்றிருக்கிறீர்கள். இதனைத் திறம் பட நடத்திச் செல்ல வேண்டிய மகத்தான பெரும் ஆற்றல் உங்களுக்கு உண்டு—நீங்கள் திறம்பட நடத்திச் செல்வீர்கள் என்ற நம்பிக்கை எங்கள் எல்லோருக்கும் நிறைய இருக்கிறது. உங்களை நேரடியாக எங்களுக்குத் தெரியாவிட்டாலும், கடந்த 20 ஆண்டுகளில், திருநெல்வேலிச் சீமையில், வக்கீல் கோட்டத்தில் உங்களுடைய வாதத் திறனை, உங்களுக்கு வழக்கறிஞர் தொழிலில் இருக்கிற பேராற்றலை, உங்களிடம் தொழில் பயின்ற எனது நண்பர்கள், பல இளம் வழக்கறிஞர்கள் மூலம் கேள்விப் பட்டிருக்கிறேன். அதே போல, சட்ட சபையில் தாங்கள் ஐந்து ஆண்டுகள் இருந்து நல்ல பயிற்சி பெற்றிருக்கிறீர்கள். அதே நேரத்தில், நீங்கள் இந்தப் பெரும் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு முன் வரையில் இருந்த கட்சியின் சார்பில் திருநெல்வேலிச் சீமைக்கு அரசியல் தளநாயகராக இருந்து காரியங்களில் ஈடுபட்டிருக்கிறீர்கள். இந்த நேரத்தில் நீங்கள் கட்சிக்கு அப்பாற்பட்டவராக மட்டுமல்ல, கட்சிக்கு மேற்பட்டவராக, நடுநாயகமாக இன்றைக்குப் பெரும் பதவியை ஏற்றிருக்கிறீர்கள். கனம் கல்யாணசுந்திரம் அவர்கள் குறிப்பிட்டது போல உண்மையில் இன்றைக்கு நீங்கள் சற்று முன் வரையில் உறுப்பினராக இருந்த கட்சிக்கும் எங்களது கட்சிக்கும் அழுத்தமான, ஆழமான வித்தியாசம் இருக்கிறது என்று நீங்கள் நிச்சயமாக உணர்வீர்கள். அதைப் போல எதிர்க்கட்சியில் இருக்கும் நாங்கள் பலரும் முரண்பாடு, மாறுபாடு கொண்டவர்கள். எங்கள் தலைவர் கனம் நெடுஞ்செழியன் அவர்கள் உறுதி அளித்தது போல, மாநில மக்கள் நலனில் அக்கறையோடு ஒத்துழைத்தாலும், சிலபல நேரங்களில் உணர்ச்சிகள் சீறி பீறிட்டுக்கொண்டு மோதுதல் நேரிடும்போது, நீதி, நேர்மை, நடுநிலைமை ஆகியவற்றுக்குப் பிறப்பிடமாக உள்ள தென்பாண்டி மண்டலத்தைச் சேர்ந்த திருநெல்வேலிச் சீமையி

31st March 1962]   [Sri K. A. Mathialagan]

விருந்து வரும் நீங்கள் தராசு முனையில் நின்று எங்களுக்கு நல்ல முறையில் நீதி அளிப்பீர்கள் என்ற பெரும் நம்பிக்கை இருக்கிறது. அந்த நம்பிக்கை விதையை எங்கள் உள்ளத்தில் ஊன்றுகிறோம். அந்த விதை செடியாகி, மரமாகி, பூவாகி, கனியாகி கடைசியாக ஐந்தாண்டு முடியும் நேரத்தில் இன்றைக்கு நடுகிற நம்பிக்கைச் செடியிலேயிருந்து பறிக்கப்பட்ட கனிகளை அன்புக் காணிக்கை யாகவும், மலர்களை பாராட்டு மாலையாகவும் சூட்டுகிற வாய்ப்பை அளிப்பீர்கள் என்று நம்புகிறேன். இன்றைக்கு நாம் அங்கம் வகிக்கும் இந்தப் பெரும் சபையில், தாங்கள் ஏற்றிருக்கிற பெரும் பதவியை இதற்கு முன்னர் பல பெரியவர்கள் அலங்கரித்திருக் கிறார்கள். நான் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிற ஆயிரம் விளக்குத் தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தவர் திரு. சிவ சண்முகம் பிள்ளை. முன்மாதிரியாக பல இலக்குகளை இலக்கியங் களைச் சிருஷ்டித்து விட்டுச் சென்றிருக்கிறார். அதே மாதிரி திரு. புலுசு சாம்பமூர்த்தி அவர்களும், டாக்டர் யு. கிருஷ்ணா ராவ் அவர்களும் சிருஷ்டித்திருக்கிறார்கள். இந்த சட்ட மன்றம் பல பெரும் காரியங்களைச் செய்திருக் கிறது, முன்மாதிரிகளைச் செய்திருக்கிறது. அப்படிப்பட்ட முன் மாதிரிகளைத் தாங்களும் பின்பற்றுவீர்கள் என்ற பெரும் நம்பிக்கை எங்களுக்கு நிறைய இருக்கிறது. அந்த நம்பிக்கை என்றும் குறையாது தாங்கள் செயலாற்றுவீர்கள் என்று நான் சார்ந்திருக் கும் கட்சியின் சார்பில் சொல்லிக்கொள்கிற அருமையான நேரத் தில், புனிதமான நேரத்தில். சபையின் உரிமைகள், சபையின் சலுகைகள், நலன்கள் ஆகியவற்றின் பாது காவலராக இருக்கப்போகும் தங்களுக்கு எதிர் கட்சிக்காரர் களாகிய எங்கள் பெரும் ஒத்துழைப்பு இருக்கும். தங்கள் ஆணைக்குக் கட்டுப்பட்டு, கட்டளைக்கு அடிபணிந்து இருப்போம் என்று இந்த நேரத்தில் திடமாகச் சொல்லிக்கொள்ள கடமைப் பட்டிருக்கிறேன். ஒத்துழைப்பு என்பது ஒரு சார்புடையதல்ல. உரிமையும், கடமையும் ஒன்றோடொன்று உறவு முறை கொண்டது. ஒருவன் தன்மானத்திற்கு ஊறு நேருகின்ற நேரத்தில், எந்தத் தனிமனிதனும் சகித்துக்கொள்வதில்லை. ஒரு பெண்மணி தன் னுடைய கற்புக்கு பங்கம் நேருகிற காலத்தில் பொறுத்துக் கொள்வதில்லை. தன்னாட்சிக்கு ஆபத்து வருகிற நேரத்தில் எந்த நாடும் அதனை அறைகூவலாக எடுத்துக் கொள்கிறது. இந்த அடிப்படையில், தமிழ் மாநிலத்தில் வாழும் நாலு கோடி மக்களின் நலன்கள், நம் கரங்களிலே ஒப்படைக்கப்பட்டிருக்கிறது என்பதை நினைவிலிருத்தி ஒத்துழைக்கக் காத்திருக்கிறோம். தங்களுக்குக் கிடைத்த பெரும் சிறப்பைக் கண்டு நாங்கள் பெருமைப்படுகிறோம். இன்னொரு பெரும் சிறப்பையும் நாங்கள் பெற விரும்பினோம். ஆளும் கட்சித் தலைவரும், நிதி அமைச்சருமாகிய கனம் திரு. எம். பக்தவத்சலம் அவர்கள் நீங்கள் இப்பதவிக்கு ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டமைக்கு எதிர்க்கட்சியைப் பாராட்டினார்கள். எங்களுடைய கட்சியாகிய திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பிலே நாங்கள் உங்களை முன்மொழிய வேண்டுமென்று கருதிக் கொண்டிருந்தோம். எங்களது வழிகாட்டியும், திராவிட முன்

[Sri K. A. Mathialagan] [31st March 1962

னேற்றக் கழக பொதுச் செயலாளருமான அறிஞர் அண்ணா அவர்கள்—தாங்கள் இந்தப் பதவிக்கு தேர்ந்தெடுக்கப்படுவதற்கு முன் வினாடிவரை சார்ந்திருந்த கட்சிக்கு விடுத்த வேண்டுகோள் விழலுக்கு இரைத்த நீராகி விட்டது. எனினும், இந்தப் பெருமையான பதவிக்கு தாங்களும், தங்களுக்கு துணையாக துணை சபாநாயகர் அவர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதுகண்டு மகிழ்ச்சி யடைகிறோம். துணைச் சபாநாயகர் அவர்களும் ஒரு நல்ல வழக்கறிஞர்; அனுபவம் மிக்கவர். அவர்களுக்கும் எங்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் மீண்டும் மகிழ்ச்சியையும், வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன். இந்தத் தடவை இந்த மாமன்றம் சட்டப் படிப்பும், பயிற்சியும் உள்ள இருவரை, சட்டக் கல்லூரியின் இரு பழைய மாணவர்களை, சட்டத்தோடு நெருங்கிய தொடர்புள்ள இந்தப் பொறுப்புகளுக்கு தேர்ந்தெடுத்திருக்கிறது. சட்டக் கல்லூரியின் பழைய மாணவன் என்ற முறையிலும் என்னுடைய மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டு, என் வாழ்த்துதல்களையும் பாராட்டுதல்களையும் கூறி முடிக்கின்றேன்.

Sri A. KUNJAN NADAR : Mr. Speaker, Sir, as an Independent Member of this House, I rise to congratulate you and Sri K. Parthasarathy on your unanimous election as Speaker and Deputy Speaker respectively of this House. Mr. Speaker, Sir, you are now elevated to a very high and responsible post. You are now occupying a place which is above politics and above parties. I have known you as a well-balanced lawyer and a well balanced politician till now. I am sure you will be able to shine in this judicial place as well. The whole State has reposed its confidence in you just now. You are now the guardian of democracy in this State. The common man knows democracy only through the procedure that is followed in this House, not in mere theory. He can understand and assimilate the principles of democracy through the functioning of this House.

Sir, I am sure you will give to all hon. Members irrespective of their party affiliations every opportunity to express themselves freely in this House and thus show to the common man how democracy is to work. With these few words, I wish you Mr. Speaker, a very successful period of office, and I wish the same to the Deputy Speaker as well. Thank you, Sir.

* Sri MUNU ADHI : அவைத் தலைவர் அவர்களே, இன்றைய தினம் சட்ட மன்ற அவைத் தலைவர் தேர்தல் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டிருப்பதைக் கண்டு நாங்கள் பெரும் மகிழ்ச்சி எய்துகிறோம். ஆகவே நாங்கள் 50 பேர் திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பிலே இந்த மன்றத்திற்கு வந்திருந்தாலும், ஒருமனதாக ஆதரித்திருக்கிறோம் என்பதை நம்முடைய அவைத் தலைவர் அவர்கள் நன்கு தெரிந்து கொண்டிருப்பார்கள். எங்களைப் போன்றவர்கள் அரசியல் கட்சியிலே அனுபவம் பெற்றிருந்தாலும், சட்ட மன்றத்திலே அவ்வளவு அனுபவம்

31st March 1962] [Sri Munu Adhi]

இல்லை என்பதை மனப்பூர்வமாக ஒப்புக்கொள்கிறோம். ஆகவே எங்களுக்கெல்லாம் ஆசானாக இந்தச் சபையிலே தாங்கள் இருந்து கற்றுக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதே நேரத்தில் நாங்கள் மக்களுடன் தொடர்புகொண்டு சொல்லக்கூடிய வற்றை இம்மன்றத்திலுள்ளவர்கள் அறியும் சந்தர்ப்பத்தையும் அளிப்பீர்கள் என்ற நல்ல நம்பிக்கையும் உண்டு. அவைத் தலைவர் அவர்கள் நல்ல நடுநிலைமையாளர் என்பதையும் அறிவேன். இதைப் பலர் பாராட்டியதிலிருந்தும், வாழ்த்தியதிலிருந்தும் தெரிந்துகொள்ளலாம். அந்த முறையிலே நானும் வாழ்த்து கிறேன். எங்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சார்ந்த வர்கள் பேசும்போது அவர்கள் நல்ல நீதியும், நேர்மையும் உள்ள வர்கள் என்று பேசியதிலிருந்தே அவருடைய பெருமையை நாங்கள் கண்டு கொண்டிருக்கிறோம். அதாவது எங்கள் அரசியல் கலைஞர் அவர்கள் செல்லமாக நடந்து கொள்ளுவதில் அவரது முன் பெயரை வைத்துக் கொண்டு சொன்னார்கள். நான் அவரது பின் பாதியை அதாவது பாண்டிய அரசரது வரலாற்றை, அவர்கள் எவ்வளவு நேர்மையுடன் நடந்துகொண்டு உதவி புரிந்திருக் கிறார்கள் என்பதைச் சொல்கிறேன். இந்தக் கதைகள் எல்லோ ருக்கும் தெரியும். சோழ நாட்டு சிபிச் சக்ரவர்த்தி புறாவிற்காக தன் உடலையே அர்ப்பணம் செய்தார். ஆகவே அந்த அரசர்கள் வழிவந்தவர்கள் எவ்வளவு நேர்மையாகவும், நீதியாகவும் நடந்து கொள்வார்கள் என்பதிலே எங்களுக்கு நம்பிக்கை உண்டு. கொடி கீழே படர்ந்து இருக்கிறது என்பதற்காக, பாரி தன் தேரையே விட்டுவிட்டு வந்த கதையும் நமக்குத் தெரியும். அதைப்போல நல்ல நேர்மையுடனும், நீதியுடனும் நடந்துகொண்டு இந்த சட்ட மன்றத்தை நல்லமுறையிலே நடத்திச்செல்வதில் ஆசானாக இருந்து எங்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த எல்லா சகாக்களுக்கும், மற்றவர்களுக்கும் துணைபுரிவார் என் பதிலே எங்களுக்கு நல்ல நம்பிக்கை உண்டு. அந்த நம்பிக்கையில் தான் நானும் எழுந்து பேசுகிறேன். அதேபோல் திரு. பார்த்த சாரதி அவர்களும் ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டதற்கு எங்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பிலே மகிழ்ச்சி தெரி வித்துக்கொண்டு, அவர்களையும் வரவேற்று, வாழ்த்தி என் பேச்சை முடிக்கிறேன். வணக்கம்.

SRIMATHI RAJATHI KUNCHITHAPATHAM: கனம் சபா நாயகர் அவர்களே, இந்த சட்ட மன்றத்திற்குத் தாங்கள் சபைத் தலைவராக ஆகியது பற்றி நாங்கள் எல்லாம் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறோம். குறிப்பாக, நெல்லையைச் சேர்ந்தவர் என்ற வகை யிலும், நெல்லை தேசியம் நிறைந்தது என்பதாலும், தியாகம் நிறைந்தது என்பதாலும், அறிவு நிறைந்தது என்பதாலும், ஆர்வம் நிறைந்தது என்பதாலும் நான் மிக்க மகிழ்ச்சி அடை கிறேன். அந்த தேசிய பரம்பரையிலே வந்த தாங்கள், பல்லாண்டு காலமாக கட்சித் தலைவராக இருந்து, சிறுபான்மையினருக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டுமென்ற வகையிலே தங்களுக்கு இப்பதவி கொடுக்கப்பட்டதற்காக ஆளும் கட்சியின்

[Srimathi Rajathi Kunchithapatham] [31st March 1962

பெருந்தன்மையை எடுத்துக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். அதே சமயத்தில் இந்த சட்டமன்றத்திலே நாங்கள் சிறுபான்மையாக இருக்கக்கூடியவர்கள் பெண்கள். ஏறக்குறைய 10, 12 பேர்களுக்கு அதிகமாக இல்லே. மற்றவர்கள் எல்லோரும் ஆண்களாக இருக்கிருர்கள். இந்த நிலைமையிலே சிறுபான்மையோராக இருக்கக்கூடிய எங்களுக்கு தனிப்பட்ட முக்கியத்துவம் கொடுக்காவிட்டாலும், பெண்கள் சிறுபான்மையினராகத் தானே இருக்கிருர்கள் என்று கருதி விடாமல், ஆண்களுக்கு சமத்துவம் கொடுக்கக்கூடிய முறையிலே எங்களேயும் நடத்திச் செல்ல வேண்டுமென்று இந்தச் சமயத்திலே நான் உங்களேக் கேட்டுக்கொள்கிறேன். கடந்த சட்டசபை நடந்த காலத்தில் அத்துமீறி சில சமயங்களில் தகாத வார்த்தைகள் கூட பெண்களாகிய எங்கள்மீது எதிர்க்கட்சி தரப்பிலிருந்து வந்திருக்கிறது என்பதை இந்த சமயத்தில் ஞாபகமூட்டிக்கொண்டு, அவ்விதமான ஆபத்துக்கள் வரும்போது தாங்கள் இருந்து அபயம் கொடுக்கவேண்டுமென்று தாழ்மையோடு கேட்டுக்கொண்டு, முடித்துக் கொள்கிறேன்.

* SRI M. SHUNMUGAM : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் உதவி சபாநாயகர் அவர்களே, தமிழகத்திலே பண்புற்ற ஜனநாயகம் உருவாகிக் கொண்டு வருகிறது என்பதற்கு அறிகுறியாக நீங்கள் இந்தச் சபைக்கு ஏகமனதாக கனம் அங்கத்தினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறீர்கள். நீதித் துறையிலேயும் நீங்கள் நேர்மையாளராக, மக்கள் புகழக்கூடிய வகையிலே கடமையாற்றி பெரும் அனுபவம் பெற்றிருக்கிறீர்கள் என்பதைப் பற்றி நாங்கள் மிகவும் பெருமைப்படுகிறோம். அந்த வகையிலே உங்களுடைய பணியானது இந்தச் சபையிலே செயல்படுகின்ற நேரத்திலே உங்கள் கட்டளைகளுக்கு கீழ்படிந்து, நேர்மையாகவும், ஒழுக்கமாகவும் உங்களை ஆதரித்து நடந்து கொள்வோம் என்ற உறுதிப்பாட்டைத் தெரிவித்துக்கொண்டு, மீண்டும் உங்களேயும், துணைச் சபாநாயகர் அவர்களேயும் பாராட்டி வாழ்த்துகிறோம். வணக்கம்.

SRI K. S. NATARAJA GOUNDER : கனம் சபாநாயகர் அவர்களே, உதவி சபாநாயகர் அவர்களே, தங்களுடைய திறமையையும், அறிவையும் பாராட்டுகிறோம். தாங்கள் இருவரும் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறீர்கள். இந்தத் தமிழக சட்டமன்றம் என்றுமே ஜனநாயகத்தை பாதுகாத்திருக்கிறது. தமிழக சட்டமன்றத்தில் இருந்த எதிர்க்கட்சியினர்கள் என்றுமே சபையின் கௌரவத்தைப் பாதுகாத்திருக்கிருர்கள். அந்த முறையிலேயே இப்பொழுதும் தமிழக சட்டமன்றத்தின் கௌரவத்தை எதிர்க்கட்சியினர்கள் காப்பாற்றுவார்கள் என்ற நம்பிக்கை உண்டு. இந்த மன்றத்தில் எல்லோரும் சாபாநாயகரையும் உதவி சபாநாயகரையும் ஏகமனதாக தேர்ந்தெடுத்ததற்கு எல்லோருக்கும் நன்றியையும், வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். வணக்கம்.

31st March 1962]

* THE HON. SRI K. KAMARAJ : கனம் சபாநாயகர் அவர்களே, உதவி சபாநாயகர் அவர்களே, உங்கள் இருவரையும் இன்று போட்டி இல்லாமல் தேர்ந்தெடுத்ததற்காக நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன். சாதாரணமாக சபாநாயகர் தேர்தல் போட்டியில்லாமல் இருப்பதே நியாயம். ஆனால், பல்வேறு காரணங்களினால் சென்ற இரு தடவைகளிலும் போட்டியைத் தவிர்க்க முடியாத நிலைமையில் இருந்தோம். இன்று மூன்றாவது பொதுத் தேர்தல் முடிந்ததற்குப் பின்னால் போட்டியில்லாமல் தேர்ந்தெடுக்கக்கூடிய ஒரு நல்ல மரபை ஏற்படுத்தியிருக்கிறோம். இது தொடர்ந்து நடைபெறவேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன்.

பொதுவாக, சபையின் நடவடிக்கைகளை நேர்மையாகவும், நீதியோடும் நடத்தக்கூடியவர்களைத்தான் சபாநாயகர்களாக இந்தச் சபை தேர்ந்தெடுத்துக்கொண்டு வந்திருக்கிறது. அதேபோலவே, நேர்மையாகவும், நீதி தவறாமல் நல்ல முறையிலே யார் சார்பிலும் இல்லாமல் நடுநிலைமை வகிக்கும் ஆற்றல் உள்ள உங்களைத் தேர்ந்தெடுத்திருக்கிறோம். அதற்கு நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன். என்னைப்போலவே இந்தச் சபையில் உள்ள எல்லா அங்கத்தினர்களும் மகிழ்ச்சி அடைகிறார்கள் என்றே நம்புகிறேன். உங்களுக்கு பாராட்டு உரை வழங்கிய எதிர்க்கட்சி நண்பர்கள் உங்கள் மேல் எவ்வளவு அன்பும், நம்பிக்கையும் வைத்திருக்கிறார்கள் என்பதைப் பார்த்தால், நான் தான் பெருமகிழ்ச்சி அடைகிறேன். ஏனென்றால் நல்ல ஒரு சிறந்த நேர்மையானவரை நான் சார்ந்திருக்கிற கட்சியின் சார்பாக எல்லோருடைய பாராட்டுக்கும் உரியவராக இருக்கக்கூடியவரை தேர்ந்தெடுத்திருக்கிறோம் என்ற பெருமை எனக்குத்தான் உண்டு, எங்களுக்குத்தான் உண்டு. (ஆரவாரம்). அதுமட்டுமல்ல. நண்பர் கலியாணசுந்தரம் அவர்கள் பேசும் பொழுது இதற்கு முன்னால் நடந்த இரண்டு தீர்ப்புகளை எடுத்துச் சொன்னார்கள். இரண்டும், சபாநாயகர்களாக இருந்த சிவஷண்முகம் பிள்ளை அவர்களாலும், கிருஷ்ணாராவ் அவர்களாலும் வழங்கப்பட்ட தீர்ப்புகள். இருவரும் எங்கள் கட்சி சார்பாக போட்டிபோட்டு, எங்களுடைய சார்பாக சபாநாயகர் இடத்திற்கு தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். அவர்கள் எப்படி நடுநிலைமையில் இருந்து நேர்மையாக நடந்துகொண்டவர்கள் என்பதை எதிர்க்கட்சியினர்களின் பாராட்டுதல் மூலம் தெரிந்து, சந்தோஷப்படுகிறேன். அதைப்போலவே நீங்களும் நேர்மையாக நடக்கவேண்டுமென்று ஆசைப்படுகிறேன். நீங்கள் நேர்மையாக நடந்துகொண்டு நல்ல முறையில் உங்கள் புகழ் வளர வேண்டும் என்றும் ஆசைப்படுகிறேன். நண்பர் கருணாநிதி அவர்கள் பத்தமடைப்பாய் மிருதுவாக இருக்கும் என்று சொன்னார்கள். மிருதுவாகமட்டுமல்ல (குறுக்கீடு) உறுதியாக மட்டுமல்ல, இன்று பத்தமடைப் பாய்க்கு உலகப் புகழ் உண்டு (ஆரவாரம்). அந்தப் புகழ் ஓங்க நல்ல முறையிலே நடந்து இந்தச் சபையில் நடுநிலையாக நீங்கள் இருக்கவேண்டும். இன்று முதலே நாங்கள் மறந்து விட்டோம் நீங்கள் காங்கிரஸைச் சேர்ந்தவர்கள்

[Sri K. Kamaraj] [31st March 1962

என்பதை. நீங்கள் அவ்விதமே மறந்திருப்பீர்கள் என்று நினைக்கிறேன். அது தான் நம்முடைய மரபு, பரம்பரை வழக்கம். அந்த வழக்கப்படி நடந்து, இந்தச் சபை நல்ல முறையில் நடக்கவேண்டும்.

புதிய உறுப்பினர்கள் பலர் வந்திருக்கிறார்கள். அவர்கள் வரம்பு மீறி தெரியாமல் பேசிவிடலாம். உங்களுடைய ஆணைகளை அன்போடு புன்முறுவல் தவழும் முகத்துடன் பிறப்பித்தால் வரம்பு மீறி செல்லக்கூடியவர்களை அணைத்துக்கொண்டு செல்லக் கூடிய ஆற்றல் படைத்தவராக இருக்க முடியும். அத்தகைய புன்முறுவல் தோற்றத்துடன் ஆணையிட்டு, அடக்கி நல்ல முறை யிலே இந்தச் சபையின் கௌரவத்தை காப்பாற்றவேண்டிய பொறுப்பு இருக்கிறது என்ற முறையில் நீங்கள் நடந்து கொள்வீர்கள் என்ற நம்பிக்கையும் உறுதியும் எனக்கு இருக்கிறது.

உங்கள் இருவரையும் நான் மீண்டும் பாராட்டி என்னுடைய வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொண்டு, உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

* **Sri K. PARTHASARATHY** : கனம் அவைத் தலைவர் அவர் களே, இன்று என்னையும், தங்களையும் இந்த புகழ் பெற்ற சபை யின் அங்கத்தினர்கள் ஏகமனதாக தேர்ந்தெடுத்ததற்கு நான் என்னுடைய நன்றி கலந்த வணக்கத்தைச் செலுத்துகிறேன். இந்தச் சபையினுடைய புகழ் உலகமெங்கும் பரவியிருக்கக்கூடிய நிலைமை ஏற்பட்டிருப்பது அதனுடைய தலைவர்களுடைய தீர்ப்பு களினாலும், அவர்கள் மக்களுடைய நன்மைக்கு பாடுபடுகிறவர் களாக உள்ள அங்கத்தினர்களுடைய உரிமைகளை பாதுகாக்கக் கூடியவர்களாகவும் அமைந்ததினாலும்தான். அந்த முறை யிலே இந்தச் சபையில் உள்ள அங்கத்தினர்கள் என்னிடத்திலும், தங்களிடத்திலும் நம்பிக்கை வைத்து, சிறந்ததோர் வகையில் நேர்மையான முறையில் நடுநிலைமை வகித்து சேவை செய்வோம் என்ற நம்பிக்கை வைத்து ஏக மனதாகத் தேர்ந்தெடுத்திருக் கிறார்கள். அந்த நம்பிக்கை வீண்போகாமல் உறுதியுடனும், நேர்மையுடனும் நடந்துகொள்ள என்றும் கடமைப்பட்டுள்ளேன் என்ற உறுதியை வணக்கத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இன்று பேசிய எதிர்க்கட்சித் தலைவர்களும், கனம் முதல் அமைச்சர் அவர்களும், கனம் நிதி அமைச்சர் அவர்களும், இன்னும் மற்ற உறுப்பினர்களும் என்னைப்பற்றி நல்ல வார்த்தைகளைச் சொல்லியிருக்கிறார்கள். அவர்கள் எல்லோருக்கும் நான் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன். என்னை ஏகமனதாகத் தேர்ந் தெடுத்ததற்கு மீண்டும் ஒரு முறை எல்லா அங்கத்தினர்களுக்கும் என்னுடைய நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்ளு கிறேன். நல்ல முறையில் இந்தச் சபை செயல்பட, மக்களுக்கு நன்மை செய்யவேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடு இங்கு வந்துள்ள எல்லா அங்கத்தினர்களும் நல்ல முறையில் செயல்படு வதற்கு, நானும் என்னுடைய ஒத்துழைப்பைக் கொடுத்து, அந்த

31st March 1962] [Sri K. Parthasarathy]

நோக்கம் ஈடேற உதவி செய்வதற்கு கடமைப்பட்டுள்ளேன் என்ற உறுதியை தெரிவித்துக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக் கொள்ளுகிறேன். வணக்கம்.

**MR. SPEAKER :** இந்தப் புனிதமான சபையின் தலைவராக என்னை ஏகமனதாகத் தேர்ந்தெடுத்ததற்கு என் நன்றியும், வணக்கமும் உங்களுக்கு உரித்தாகுக. நீங்கள் எல்லோரும் பேசிய பேச்சுக்களை உருக்கத்தோடு நான் கவனித்தேன். இந்தச் சபையின் தலைவர்களாக நல்ல சக்தியோடும், புகழோடும் செயலாற்றிய கனம் சிவஷண்முகம் பிள்ளை, கனம் கிருஷ்ணராவ் அவர்களைப் பற்றி சான்றுகளோடு நீங்கள் சொல்லும்பொழுது, இந்தச் சபையினுடைய பொறுப்புக்களை நான் நன்றாக உணர்கிறேன். அவர்களை எப்படி இந்தச் சபையிலே நீங்கள் மதித்து நல்ல முறையிலே இந்தச் சபை நடப்பதற்கு உதவினீர்களோ, அதே உதவி உங்களிடமிருந்து எனக்கும் கிடைக்கும் என்ற நம்பிக்கையை நீங்கள் தெரிவிக்கும்பொழுது, நான் அந்தப் பணியை நல்ல முறையில் செய்து முடிக்க முடியும் என்ற நம்பிக்கை அடைவதோடு, பெருமிதமும் அடைகிறேன்.

இந்த சட்டசபை இந்த நாட்டின் நன்மைக்காக, மக்கள் நன்மைக்காக பல சட்டங்களை இயற்றி, அவைகளை நடைமுறையிலே கொண்டுவரவேண்டும் என்பது நீங்கள் எல்லோரும் அறிந்த விஷயம். அதில் கட்சிகள் ஒன்றுமட்டுமல்ல, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து இருந்தாலும் ஒருவிதமான ஆட்சேபமும் இருக்க முடியாது, தப்பிதமும் இருக்க முடியாது. இதையெல்லாம்விட, பெண்களுக்கு என்று தனிக்கட்சி இருப்பதும்கூட தப்பு என்று சொல்லமுடியாது. அவர்களுடைய உரிமைகளைப்பற்றி கனம் அங்கத்தினர் அவர்கள் இந்த சபையிலே சொன்னார். எது எப்படியாயினும், பொது மக்கள் நன்மைக்காகவும், நாட்டின் நன்மைக்காகவும் நாம் எல்லோரும் எல்லாக் காரியங்களையும் செய்கிறோம் என்ற உணர்ச்சி நமக்கு இருக்கும்பொழுது, நம்மிடையே வேகமும், உஷ்ணமும், மோதலும் இருக்கவேண்டிய அவசியமே இருக்காது என்று நினைக்கிறேன். நேர்மையாக எந்தப் பிரச்னையையும் கவனித்து சுமுகமான முறையிலே நாம் அதை நடத்திச் செல்ல முடியும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. ஆகவே, நாம் எல்லோரும் சகோதரர்கள் போல் எல்லாக் காரியங்களையும் அணுகிப் பார்க்கவேண்டும். சகோதரர்கள் என்றால், ஒருவர் சொல்வதைத் தான் இன்னொருவர் கேட்கவேண்டும் என்ற எண்ணம் அல்ல. அதிலே இருக்கிற பாரபட்சங்களை நன்றாகப் பேசித் தீர்த்து நல்ல முடிவுக்கு வருவது நமது மரபு என்பதை நீங்கள் எல்லோரும் அறிவீர்கள். வக்கில் தொழிலிருந்து வந்த காரணத்தினாலே, ஒரு கட்சிக்குத்தான் பேசவேணே என்ற ஐயப்பாடு வேண்டாம். மற்றொரு கட்சியின் காரியங்களைப் புரிந்து கொண்டால்தான், எந்தக் கட்சியின் சார்பாகவும் பேச முடியும். இரு கட்சிகளையும் புரிந்துகொண்டால்தான் வக்கில் தொழிலைக் கூட நன்றாகப் பார்க்க முடியும். அந்தத் தொழிலின்

பெருமையையும் இந்த ஸ்தானத்தில் இருந்துகொண்டே காப்பாற்ற முயற்சிப்பேன். தரம் குறையாது இந்த சபை நல்ல முறையில் நடைபெறுவதற்கு உங்கள் எல்லோருடைய அன்பும், ஆதரவும், ஒத்துழைப்பும் தேவை. அவை எப்பொழுதும் இருக்குமென்று நிச்சயமாக நம்புகிறேன்.

சற்று முன்பு ஒரு பெண் அங்கத்தினர் சென்ற சபையிலே அவர்களுக்கு ஏற்பட்ட ஒரு சில இன்னல்களை எடுத்துச் சொன்னார்கள். அப்படிப்பட்ட இன்னல்கள் இச்சபையில் இருக்காது என்று நம்புகிறேன். ஏனென்றால் இன்று இருக்கிற தலைவர்கள் எல்லாம் அன்பும், கண்ணியமும், கட்டுப்பாடும் நிறைந்தவர்கள். ஒரு சில நண்பர்கள் இந்த சபைக்குப் புதிதாக வந்திருக்கலாம். இருந்தாலும்கூட, கட்டுப்பாடுடைய ஒரு கட்சியின்கீழ் வேலை செய்யும் பொழுது அந்தமாதிரி சந்தர்ப்பங்கள் இருக்காது என்பதையும், அப்படி ஏற்படுவதற்கு ஏதாவது சந்தர்ப்பம் இருந்தாலும்கூட, அதை அனுபவமிக்க தலைவர்கள் வராது பார்த்துக்கொள்வார்கள் என்றும் நம்புகிறேன். ஆகவே, என்னையும், எனது நண்பர் பார்த்தசாரதியையும் இந்தப் பொறுப்பான ஸ்தானத்திற்கு தேர்ந்தெடுத்த அங்கத்தினர்கள் எல்லோருக்கும் மறுபடியும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்த சபையிலே இருக்கும் பத்திரிகை நிருபர்கள் எப்போதும் நல்ல ஆதரவு கொடுத்து வந்திருக்கிறார்கள் என்று அறிகிறேன். அவர்கள் நல்ல முறையில் சபைக்கு சேவை செய்வதில் ஒத்துழைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அதோடு நமது முதலமைச்சர் அவர்கள் குறிப்பிட்ட மாதிரி, இரண்டு பெரிய, கண்ணியமிக்க சபாநாயகர்கள் சிவஷண்முகம் பிள்ளை அவர்களும், காலம் சென்ற ஸ்ரீ கிருஷ்ணாராவ் அவர்களும் இந்த சபையிலே எவ்வாறு நேர்மையாக நடந்தார்களோ, அது போன்று நடப்பதற்கும், இந்த ஸ்தானத்திற்கும் நல்ல பெயர் வாங்குவதற்கு நான் முயற்சிப்பேன் என்று கூறிக்கொண்டு, என்னைத் தேர்ந்தெடுத்த எல்லோருக்கும் மறுமுறை நன்றி தெரிவித்துக்கொண்டு, முடித்துக்கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : கனம் சபாநாயகர் அவர்களே, அடுத்த நிகழ்ச்சிக்குப் போவதற்கு முன்பு, சபையின் முதல் வரிடமிருந்து நான் ஒரு விஷயத்தை அறிய விரும்புகிறேன். தாங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு, பதவியேற்ற உடனேயே, இப்படிப்பட்ட பிரச்னையை எழுப்ப நேர்ந்தது பற்றி .

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஆன் எ பாயிண்ட் ஆப் ஆர்டர். பிரச்னை எதுவும் எழுப்புவதற்கு இப்பொழுது இடமில்லை. என்னிடம் கனம் அங்கத்தினர் ஏதாவது தகவல் கேட்கவேண்டுமென்றால் கேட்கலாம். இப்பொழுது அடுத்த நிகழ்ச்சியே கிடையாது. இனிமேல் சபையை ஒத்திப் போட வேண்டியதுதான். ஆகையினால் இதிலே பிரச்னை எழுப்புவதற்கு இடமில்லை என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

31st March 1962]

**Sri M. KALYANASUNDARAM:** பிரச்னை என்றால் பாயின்ட் ஆப் ஆர்டர் என்பது அல்ல. நான் சபையின் முதல்வரிடமிருந்து ஒரு விஷயத்தை அறிந்துகொள்ள விரும்புகிறேன். அந்தப் பிரச்னையை இப்பொழுதே கொண்டுவரவேண்டியிருக்கிறது என்றுதான் சொன்னேன். "ஒழுங்கு பிரச்னை" என்ற வார்த்தையை நான் உபயோகப்படுத்தவில்லை. "ஒழுங்கு பிரச்னை" என்றால் என்ன என்பது நமக்குப் பழக்கத்தில் தெரியும். நான் அந்தமாதிரி வார்த்தையை உபயோகிக்கவில்லை. சபா நாயகர் பதவியேற்ற உடனே, இந்த மாதிரி பிரச்னையை எழுப்ப வேண்டியிருக்கிறது என்றுதான் சொன்னேன். சபையின் முதல்வர் இதைத் தெளிவுபடுத்தவேண்டுமென்று விரும்புகிறேன். அரசியல் சட்டத்தின் 176-வது பிரிவின்படி இந்த சபையின் தொடக்கத்திலேயே கவர்னர் அவர்களின் உரையானது நிகழ்த்தப்படவேண்டும். இதுவரையில், இந்த சபையில் கவர்னர் உரை நிகழ்த்தப்படும் என்கிற அறிவிப்பு அங்கத்தினர்களுக்கு வரவில்லை. ஆகையால்தான் இந்த சபையை ஒத்திப் போடுவதற்கும் இதற்கும் சம்பந்தம் உள்ளது என்பதை முதல்வர் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இந்த சபையை அழைக்கும் அரசாங்க ஆணை (ஜீ.ஓ. எண். 14) 16ம் தேதியிட்டு அனுப்பப்பட்டிருக்கிறது. சபை அழைக்கப்பட்ட உடனேயே அது சட்டசபைக் கூட்டத்தின் தொடக்கமாக ஆகிவிடுகிறது. சபையின் கூட்டத் தொடக்கத்தில் கவர்னர் உரை நிகழ்த்தப்படவேண்டுமாதலால் . . .

**The Hon. Sri M. BHAKTAVATSALAM:** This is not the information which can be sought now.

**Mr. SPEAKER:** கனம் அங்கத்தினரை நான் கேட்டுக்கொள்வது என்னவென்றால், கவர்னர் அவர்கள் உரை நிகழ்த்துவதற்கு முன்னதாக எந்தவிதமான அலுவல்களையும் இந்த சபையிலே நடத்தக்கூடாது என்ற காரணத்தினாலே அவர்களுக்கு ஏதாவது சந்தேகமிருக்குமானால், கவர்னர் உரை முடிந்தபிறகு இந்தக் கேள்வியை எழுப்பலாமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இத்துடன் இந்த சபை ஒத்திவைக்கப்படுகிறது.

The House then adjourned.

### V. PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### A. Statutory Rules and Orders.

35. *Notification issued with G.O. Ms. No. 95, Home, dated 5th January* 1962 *exempting from payment of motor vehicles tax leviable under the Madras Motor Vehicles Taxation Act*, 1961 *vehicles bearing registration Nos. MSW* 1279, *MSW* 1361 *and MSW* 1362 *belonging to UNICEF.* [*Laid on the table of the House under section* 11 (2) *of the Madras Motor Vehicles Taxation Act*, 1931 (*Madras Act III of* 1931).]